பதிவு எண் எம். 8798



# தீக்கதிர்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்



கதிர் 9-ஏ ] மதுரை 19-9-71 ஞாயிற்றுக் கிழமை (வெளியீடு 20-9-71 திங்கள் கிழமை) 4 பக்கங்கள் 13 காசுகள் [ மலர் 27

# அகில இந்திய விவசாயிகள் சங்க மாநாடு

# பஞ்சாபில் கூடுகிறது!

## தோழர் சுர்ஜித் அழைப்பு

ஜலந்தர், செப். 18 —

அகில இந்திய விவசாயிகள் சங்க மாநாடு பஞ்சாப் மாநிலத்தில் ரூர்காகலன் என்ற இடத்தில் செப். 23-ந் தேதி கூடுகிறது.

நம் நாட்டின் விவசாயிகளையும் விவசாயத் தொழிலாளர்களையும், எதிர்நோக்கியுள்ள பிரச்னைகளை விவாதிக்கவும் வலுவான விவசாய இயக்கத்தை கட்டுவதற்கான வழிவகைகளைக் காணவும் இந்திய விவசாயி வர்க்கத்தை பிரதிநிதித்துவப்படுத்தும் பிரதிநிதிகள், நாடெங்குமிருந்து வந்து மாநாட்டில் கலந்துகொள்கிறார்கள். பஞ்சாப் மாநில விவசாய சங்கம் இந்தப் பிரதிநிதிகளை வரவேற்கவும் மாநாட்டை வெற்றிகரமாக நடத்தவும் எல்லா ஏற்பாடுகளையும் செய்துள்ளது. இந்த மாநாட்டை ஒட்டி அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் உபதலைவர் தோழர் அரிகிஷன்சிங் சுர்ஜித் விடுத்துள்ள அறிக்கையை கீழே பிரசுரிக்கிறோம்:

அகில இந்திய விவசாய சங்க மாநாடு பஞ்சாப் மாநிலத்தில் நடைபெறுவது இது முதல் தடவை அல்ல. 1936-ல் சங்கம் அமைக்கப்பட்ட பின்னர் பஞ்சாபில் மூன்று மாநாடுகள் நடைபெற்றுள்ளன. 1943-ல் பாக்ஞ என்ற இடத்தில் அ. இ. வி. சங்கத்தின் ஏழாவது மாநாடு நடைபெற்றது; 1954-ல் மோகாவில் பன்னிரண்டாவது மாநாடு நடைபெற்றபோதுதான் "நிலத்தை விட்டு வெளியேற மாட்டோம்" என்ற கோஷம் எழுப்பப்பட்டது.

1956-ல் அமிர்தசரசில் பதினைலாவது மாநாடு நடைபெற்றது.

இப்போது பஞ்சாபில் 21வது மாநாடு நடைபெறுகிறது. தேசிய விடுதலை இயக்கத்தின் புயல் எழுந்த—கதார் இயக்க விடுதலை வீரர்கள் பலரை தோற்றுவித்த பகவத் சிங்கை தோற்றுவித்த பஞ்சாபின்சோஷலிஸ்ட் கம்யூனிஸ்ட் இயக்கங்களின் கேந்திரமாகத் திகழ்ந்த ஒரு இடத்தில் இந்த மகாநாடு கூடுகிறது.

பஞ்சாப் விவசாய இயக்கம் 20-ம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே புகழ் செறிந்த பாரம்பர்யத்தைக் கொண்டுள்ளது. விவசாய இயக்கத்துக்கு முதலில் ஸ்தாபன வடிவம் கொடுத்த மாநிலங்களில் பஞ்சாபும் ஒன்றாகும். விவசாய வர்க்கத்தின் முதல் வெகுஜன ஸ்தாபனமான பஞ்சாப் விவசாய சங்கம் 1932-ல் உருவாயிற்று. ஆனால் பிரிட்டிஷ் ஆட்சி உடனே தடைசெய்துவிட்டது. 1936-ல் அகில இந்திய விவசாயிகள் சங்கம் அமைக்கப்பட்டபோது அதில் முதலில் சேர்ந்த உறுப்புகளில் பஞ்சாப் விவசாயிகள் சங்கமும் ஒன்றாகும்.

பஞ்சாபில் சங்க கொடியின் கீழ் பல போராட்டங்கள் நடைபெற்றுள்ளன. 1938-39ல் நிலவரி உயர்வை எதிர்த்து நடைபெற்ற மாநிலம் தழுவிய போராட்டத்தில் ஆயிரக்கணக்கான விவசாயிகள் கைது செய்யப்பட்டனர்.

சுதந்திரத்திற்குப்பின் நிலத்துக்காக பஞ்சாபில் பல போராட்டங்கள் நடைபெற்றன. 1959-ல் காங்கிரஸ் ஆட்சியாளர் வரிச் சுமையை ஏற்றிய போது பஞ்சாப் விவசாயிகள் சங்கத்தின் தலைமையில் வீரம் செறிந்த போராட்டங்கள் நடைபெற்றன. போலீஸ் அடக்கு முறையையும் துப்பாக்கிப் பிரயோகங்களையும், எதிர்த்து விவசாயிகள் உறுதியாகப் போராடினார்கள் ஆண்களும், பெண்களும் உயிர்த் தியாகம் புரிந்தார்கள். அந்தப் போராட்டத்தின் விளைவாக ரூ. 104 கோடி அபிவிருத்தி வரியை அரசு திரும்பப் பெற்றது. அண்மையில் நில வெளியேற்றத்தை எதிர்த்தும் நில விநியோகம் கோரியும் பஞ்சாப் விவசாயிகள் சங்கம் போராடியது.

இத்தகைய போராட்டப் பாரம்பரியம் படைத்திருந்த போதிலும் இன்று பஞ்சாப் விவசாயிகள் இயக்கம் பலவீனமாயிருக்கிறது. விவசாயத் தொழிலாளர்களையும், ஏழை விவசாயிகளையும் திரட்டி வேலையை மாற்றி அமைக்காததே இந்த பலவீனத்துக்கு காரணமாகும்.

இந்த பலவீனத்தைப் போக்க பஞ்சாப் விவசாயிகள் சங்கம் முயற்சி எடுத்துக் கொண்டுள்ளது.

பகல்பூரில் நடைபெற்ற மத்திய விவசாயிகள் கவுன்சில் கூட்டத்தில் அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் 21-வது மாநாட்டை பஞ்சாயில் நடத்த தீர்மானித்த போது, தன்னுடைய பலவீனத்தை உணர்ந்து கொண்டே பஞ்சாப் விவசாயிகள் சங்கம் இந்த வேண்டுகோளை ஏற்றது. இந்த மாநாட்டுக்கான தயாரிப்புக்களை ஜூலையிலிருந்தே பஞ்சாப் விவசாயிகள் சங்கம் தொடங்கியது.



அரிகிஷன் சிங் சுர்ஜித்

விவசாயிகள் சங்கத்திற்கு 80 ஆயிரம் உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டனர். விவசாயத் தொழிலாளர் சங்கத்துக்கு 25 ஆயிரம் உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டனர். அவர்கள் வீடுவீடாகச் சென்று நிதிதிரட்டினர்.

இதுவரை மாநிலத்தில் 600க்கு மேற்பட்ட கிராமங்களில் ரூ 80 ஆயிரத்துக்கு மேல் வசூலிக்கப்பட்டுள்ளது. வரவேற்புக்குழு அலுவலகத்துக்கு ஏற்கனவே ரூ. 60 ஆயிரத்துக்கு மேல் வந்து சேர்ந்துவிட்டது.

மகாநாட்டுக்காக ரூர்காகலான் கிராமத்துக்குவெளியே ஒரு நகரமே உருவாக்கப்பட்டுள்ளது முன்னணித் தோழர்களின் தலைமையில் வெவ்வேறு குழுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. உணவு, பந்தல், இருப்பிட வசதி, வைத்திய வசதி, முதலிய பொறுப்புகளைக் குழுக்கள் கவனிக்கின்றன.

இரண்டாயிரம் சீருடை அணிந்த தொண்டர்களைச் சேர்க்க தீர்மானிக்கப்பட்டது. இவர்களில் 10 சதவிகிதம் பேர் பெண்கள். ஆனால், ஏற்கனவே 3,000 தொண்டர்களுக்கு மேல் சேர்ந்து விட்டனர். இவர்கள் மாநாட்டு தலைவர்கள் ஊர்வலத்தில் அணிவகுத்துச் செல்வர். ஆண்கள் காக்கிநிற உடையும் கழுத்தில் சிகப்பு நிற கைக்குட்டையும் பெண்கள் வெள்ளைநிற உடையும், கழுத்தில் சிகப்புநிற கைக்குட்டையும் அணிந்துசெல்வர். பிரதிநிதிகள் தங்குவதற்கு மின்சார வசதியுடன் கூடிய கூடாரங்கள் அமைக்கப்பட்டுள்ளன. உணவு வசதிகளும் இந்த முகாமில் செய்யப்பட்டு உள்ளன. முகாமில் அமைக்கப்பட்டிருக்கும் அலங்காரப் பந்தலில் மாநாடுநடைபெறும்.

இதையொட்டியுள்ளபெரிய மைதானத்தில் பேரணி நடைபெறும். அங்கு முப்பது அடி நீளமும், இருபது அடி அகலமும் உள்ள மேடை அமைக்கப்பட்டுள்ளது. 21-வது மாநாட்டை குறிக்கும் முறையில் சாலையின் பக்கத்தில் 21-விவசாய சங்கக் கொடிகள் பறக்கவிடப்படும். அதையொட்டி வறுமையையும், போராட்டத்தையும் சித்தரிக்கும் கண்காட்சி ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. அதில் வியட்நாம், கியூபா, கொரிய மக்களின் விடுதலை போராட்டங்களையும் சோஷலிச நிர்மானத்தையும் சித்தரிக்கும் படங்கள் வைக்கப்பட்டிருக்கும்.

லூதியானா ரயில் நிலையத்திற்கு அகில இந்திய விவசாயிகள் சங்க தலைவர் வந்ததும் அவருக்கு தொண்டர்கள் வர

(3 ஆம் பத்தி பார்க்க)

(8ம் பத்தி தொடர்ச்சி)

வேற்பளிப்பர். மகாநாடு செப். 23 பிற்பகல் கொடியேற்றத்துடன் தொடங்கும். அது செப். 26-ம் தேதி வரை நடைபெறும். அன்று காலை 10 மணிக்கு மகாநாடு நடைபெறும் இடத்தில் இருந்து 5 மைல் தொலைவிலுள்ள கொரையா ரயில் நிலையத்திலிருந்து ஊர்வலம் தொடங்கும். சீருடையணிந்த மூவாயிரம் தொண்டர்களும், ஆயிரக்கணக்கான விவசாயிகளும் இதில் செல்வர்.

அன்று பிற்பகல் 3 மணிக்கு தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள மைதானத்தில் பொதுக்கூட்டம் நடைபெறும். அதில், அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் தலைவர் தோழர் ஏ. கே. கோபாலன், ஜோதிபாசு, அரிகிருஷ்ண கோனார், சுர்ஜித் முதலானோர் பேசுவர். இரவில் கலாநிகழ்ச்சிகள் நடைபெறும்.

இந்த மாநாடு நம்நாட்டின் விவசாயிகள் இயக்க வரலாற்றில் ஒரு முன்னேற்றமாகத் திகழுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

# தேவை அடிப்படை சம்பளம் கோரி மதுரையில் ரயில்வே தொழிலாளர் ஆர்ப்பாட்டம்

மதுரை, செப். 18

நியாயமான கோரிக்கைகளை நிறைவேற்றக்கோரி இன்று மதுரை டிவிசனல் சூப்பரின்டெண்ட் அலுவலகம் முன்பு இரயில்வே தொழிலாளர்கள் ஆர்ப்பாட்டம் செய்தனர்.

தட்சிண ரயில்வே எம்ப்ளாயீஸ் யூனியன் ஏற்பாடு செய்திருந்த இந்த ஆர்ப்பாட்டத்தில் நூற்றுக்கணக்கான இரயில்வே ஊழியர்கள் கலந்து கொண்டனர்.

—அனைவருக்கும் 8 மணி நேர வேலை,

—தேவை அடிப்படைச் சம்பளம்,

—காசுவல் லேபர்களுக்கு நிரந்தர வேலை,

—சமவேலைக்கு சம சம்பளம்

—விலைவாசி உயர்வுக்கேற்ற பஞ்சப்படி,

ஆகிய கோரிக்கைகளை நிறைவேற்றவும், ஆட்டோமேசன் புகுத்தப் படுவதைத் தடுத்து நிறுத்தவும், வேலைப்பளு, ஆட்குறைப்பை எதிர்க்கவும், தொழிற்சங்க ஊழியர்கள் பழிவாங்கப் படுதலை முறியடிக்கவும் மற்றும் பல கோரிக்கைகளை வலியுறுத்தவும் இந்த ஆர்ப்பாட்டம் நடந்தது.

இந்த ஆர்ப்பாட்டத்தில் கலந்து கொள்வதற்கு கொல்லம், செங்கோட்டை, திருநெல்வேலி, தூத்துக்குடி, மண்டபம், மானாமதுரை, காரைக்குடி, விருதுநகர், மதுரை, திண்டுக்கல், பொள்ளாச்சி, பழனி ஆகிய பகுதிகளில் இருந்து தொழிலாளர்கள் வந்து கலந்து கொண்டனர்.

ஆர்ப்பாட்ட ஊர்வலம் இன்று பகல் 12 மணிக்கு மதுரை லோகோ செட்டிலிருந்து புறப்பட்டு, முழக்கங்களை முழங்கிக் கொண்டு டிவிஷனல் சூப்பிரண்டெண்ட் அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் நடைபெற்றது.

ஆர்ப்பாட்டக்காரர்கள் தங்களது கோரிக்கைகளுடன் "இரயில்வேக் காலனிகளில் குடிநீர் வசதி வேண்டும்! சங்க அங்கீகாரத்திற்காக வாக்கெடுப்பு நடத்துக! ஆஸ்பத்திரிகளில் தரமான மருந்து வழங்குக! பி டபிள்யூ இன்ஸ்பெக்டரை மாற்றுக! ஆகிய முழக்கங்களையும் எழுப்பினர்.

தட்சிண இரயில்வே எம்ப்ளாயீஸ் யூனியன் (டி. ஆர். இ. யூ) அங்கீகரிக்கப்பட்ட சங்கம் இல்லை என்று சாக்குப்போக்கு கூறி, டிவிசனல் சூப்பரின்டெண்ட் கோரிக்கை மனுவைப் பெறவே மறுத்துவிட்டார்.

எனவே, கோரிக்கைமனுவை மத்திய சங்கத் துணைத் தலைவர்கள் தோழர்கள் எஸ். துரைராஜ், எஸ். லோககுரு ஆகியோர் ஆபீஸ் சூப்பரின்டெண்டிடம் கொடுத்தனர்.

பின்னர் நடந்த கூட்டத்தில் கோரிக்கைகளை விளக்கியும், இயில்வே நிர்வாகத்தில் உள்ள குறைபாடுகளையும் பி.டபிள்யூ. இன்ஸ்பெக்டரின் அநியாயப் போக்குகளை பற்றியும் தோழர்கள் துரைராஜ், லோககுரு ஆகியோர் பேசினர்.

இதேபோன்று இதற்குமுன்பு கோரிக்கைகளை வலியுறுத்தி இரு தடவை ஆர்ப்பாட்டங்கள் செய்திருந்தும் கோரிக்கைகள் நிறைவேற்றப்படவில்லையென்றும் தங்களது கோரிக்கைகளை நிறைவேற்றாவிட்டால் அடுத்த கட்டப் போராட்டத்தில் இறங்க நேரிடும் என்றும் கோரிக்கைகள் நிறைவேறும் வரை போராடுவோம் என்றும் வலியுறுத்தினர்.

இதே போல், சென்னை, ஒலவக்கோடு, திருச்சி ஆகிய டிவிஷனல் சூப்பரின்டெண்ட் அலுவலகங்கள் முன்பும் ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றுள்ளன.

(ந நி)

# கைத்தறி தொழிலுக்கு குறைந்தபட்ச சம்பளத்தை அமுல் படுத்துக

தோழர்களே,

தமிழ்நாட்டில் பலவிடங்களில், கைத்தறி நெசவாளர்கள் சம்பள உயர்வும் சட்டப் பாதுகாப்பும் கோரி போராடி வருகிறார்கள். மதுரை, கும்பகோணம், பரமக்குடி, நாகர்கோவில், முதலியவிடங்களில் நடந்துவரும் கிளர்ச்சி, போராட்டங்கள் பற்றிய செய்தியை அறிவீர்கள்.

மிக மோசமான கூலிகொடுத்து, சுரண்டப்பட்டு வரும் தொழில்களில் குறைந்தபட்ச கூலிச் சட்டத்தை அமுல் நடத்தவேண்டும் என்றுகோரி கிளர்ச்சி, போராட்டங்களை நடத்தியதின் விளைவாக சென்ற காலங்களில் சில தொழில்களில் ஓரளவு சம்பள உயர்வு பெற முடிந்துள்ளது என்பதை நீங்கள் அறிவீர்கள்.

எனவே, கைத்தறித் தொழிலிலும் குறைந்த பட்ச சம்பளச் சட்டத்தை உடனடியாக அமுலுக்குக் கொண்டு வர தமிழக அரசு நடவடிக்கை எடுக்கவேண்டும் என்பதை மையமான கோரிக்கைகளில் ஒன்றாக வைத்து, கிளர்ச்சி பிரசாரங்களை துவக்குமாறு தமிழகமெங்கும் உள்ள சி. ஐ. டி. யூ. ஆதரவாளர்களையும் மற்றும் நெசவாளர் சங்கங்களையும் நெசவுத் தொழிலாளர்களையும் வேண்டிக்கொள்கிறோம்.

வி. கார்மேகம்,
பொருளாளர்.

ஏ. நல்லசிவன்,
உதவிச் செயலாளர்.

மதுரை
18—9—71.

சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக் குழு.

## பெரியகுளம் நகரசபைத் தேர்தலில் மார்க்சிஸ்ட் வெற்றி!

பெரியகுளம், செப். 18—

பெரியகுளம் நகரசபைக்கு செப். 17-ல் நடைபெற்ற தேர்தலில் 15-வது வார்டில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் போட்டியிட்ட தோழர் எஸ் ஏ. ரஜாக் அமோக வெற்றி பெற்றார்.

மதுரை மாவட்டம் பெரியகுளம் நகரசபையின் 15-வது வார்டுக்கு செப்-17-ல் தேர்தல் நடைபெற்றது. இதில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் தோழர் எஸ். ஏ. ரஜாக் போட்டியிட்டார். இவரை எதிர்த்து, கூட்டணி சார்பில் தி. மு. க.வும், சிண்டிகேட்டும் போட்டியிட்டன.

இந்த மும்முனைப் போட்டியில் தோழர் எஸ். ஏ. ரஜாக் அதிக வாக்குகள் பெற்று அமோக வெற்றி பெற்றார்.

வாக்கு விபரம் வருமாறு:— மொத்தம் 70 சதவீத வாக்குகள் பதிவாயின.

| | |
|---|---|
| பதிவான வாக்குகள் | 749 |
| எஸ். ஏ ரஜாக் (மார்க்சிஸ்ட்) | 354 |
| அழகர்சாமி (சிண்டிகேட் காங்கிரஸ்) | 192 |
| அப்துல் ரஜாக் (தி.மு க) | 190 |

## சி. ஐ. டி. யூ. தமிழ் மாநில குழுவின் கூட்டம்

குழுவின் எல்லா உறுப்பினர்களுக்கும்:—

அன்புள்ள தோழர்களே!

சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக் குழுவின் கூட்டம் இம்மாதம் (செப்டம்பர்) 25, 26 தேதிகளில், தென்ஆற்காடு மாவட்டம்; நெல்லிக்குப்பத்தில் நடைபெறும். கூட்டத்தின் நிகழ்ச்சி நிரல் பின்வருமாறு இருக்கும்.

1) மாநில மாநாட்டிற்கு பின் நடந்துள்ளவை பற்றி செயலாளர் அறிக்கை.

2) சி. ஐ. டி. யூ. விளக்கப் பிரச்சார வார நிகழ்ச்சிகள் பற்றி பரிசீலனை.

3) மாநாடு நிர்வாகக் குழுவிடம் ஒப்படைத்துள்ள பணிகள்.

4) மாநிலக் குழுவின் வரவு செலவு கணக்குகள்.

5) தலைவர், காரியதரிசியால் கொண்டு வரப்படும் இதர விஷயங்கள்.

கூட்டம் 25—9—71 காலை 9 மணிக்கு ஆரம்பமாகும். நெல்லிக்குப்பம் ரயில்வே நிலையத்துக்கு அருகில் உள்ள சர்க்கரை ஆலைத்தொழிலாளர் சங்ககாரியாலயத்தில் கூட்டம் நடைபெறும். எல்லா தோழர்களும் தவறாது கலந்து கொள்ளும்படி கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

ஆர். உமாநாத்,
செயலாளர், சி ஐ டி.யூ. தமிழ் மாநிலக்குழு.

# அரிசி, உணவுப் பொருள் விலையைக் குறைத்திடுக!

தீக்கதிர்

# விதர்ப்பா மாநில கிளர்ச்சி!

ஒரே மொழி பேசும் மகாராஷ்டிர மாநிலத்தைப் பிரிவினை செய்து தனி விதர்ப்பா மாநிலம் அமைக்கும் கோரிக்கையை ஜனநாயக சக்திகள் ஏற்கமுடியாது. எனினும் விதர்ப்பா மாநிலம் கோரி கிளர்ச்சி செய்பவர்களை ஒடுக்குவதற்காக மகாராஷ்டிர அரசாங்கம் கட்டவிழ்த்து விட்டுள்ள போலீஸ் அடக்கு முறையையும் நாம் ஏற்க முடியாது. இந்த அடக்கு முறை வெறியாட்டத்தின் விளைவாக நாகபுரியில் 7 பேர் சுட்டுக்கொல்லப்பட்டிருக்கின்றனர். மேலும் 50க்கு மேற்பட்ட கிளர்ச்சிக்காரர்கள் குண்டடிபட்டும் தடியடிபட்டும் படுகாயமுற்றுள்ளனர்.

முன்பு மத்தியப் பிரதேசத்தில் சேர்ந்திருந்த 8—மாவட்டங்கள் அடங்கிய விதர்ப்பாபகுதி பின்தங்கிய பகுதியாக இருந்தது. 1956—ல் மகாராஷ்டிரத்துடன் அது இணைந்த பிறகும் பின் தங்கிய பகுதியாகவே இருந்து வருகிறது.

மேற்கு மகாராஷ்டிரத்தைச் சேர்ந்த நகர்ப்புற கிராமப்புற, முதலாளிகளின் கையிலுள்ள மகாராஷ்டிர அரசாங்கம் விதர்ப்பா பகுதியைப் புறக்கணித்ததின் விளைவே இந்த நிலைமை. நாட்டின் பொருளாதாரம் ஆழ்ந்த நெருக்கடிக்குள்ளாகியிருக்கும் சமயத்தில் இத்தகைய பகுதி மிகவும் பாதிக்கப்படுவது இயல்பே. இந்தநிலைமையில் வேலையில்லாத்திண்டாட்டம் பெருகி, இருக்கும் ஒருசில தொழிற்சாலைகளும், கிட்டத்தட்டநிரந்தரமாக மூடப்பட்டு விதைத்தறியின் போட்டியைச் சமாளிக்க முடியாத நிலைமையில் ஆயிரக்கணக்கான நெசவாளர்கள் அழிவை எதிர்நோக்கும் நிலையில் விதர்ப்பா பகுதி மக்களிடம் கசப்புணர்ச்சி வளர்ந்து வருகிறது. இந்த யதார்த்த நிலைமையைப் புறக்கணிக்க முடியாது.

விதர்ப்பா பகுதியில் வலுவான இடதுசாரிஜனநாயக இயக்கம் இருந்திருக்குமானால் மக்களின் அதிருப்தியை அது சரியான வழியில் திருப்பிவிட்டிருக்கும். விதர்ப்பா பகுதியை மட்டுமின்றி நாட்டின் மற்ற விரிந்த பகுதிகளையும் இந்த நிலைமையில் வைத்திருப்பதற்கான காங்கிரஸ் கொள்கைகளுக்கு எதிரான போராட்டத்தில் திருப்பிவிட்டிருக்கும்.

சுதந்திரமடைந்தபின் நாட்டுக்குத் துரிதமான தொழில், விவசாய மளர்ச்சி தேவைப்பட்டது. காங்கிரசால் அதைச்செய்ய முடியவில்லை.

உலக முதலாளித்துவமே நெருக்கடியில் சிக்கியிருக்கும் காலகட்டத்தில் நிலப்பிரபுத்துவத்துடனும் ஏகாதிபத்தியத்துடனும் கூட்டுச்சேர்ந்து முதலாளித்துவத்தைக் கட்டமுயலும்போது தொழில் வளர்ச்சி நத்தை வேகத்தில்தான் ஏற்பட முடியும்.

மாநிலங்களைப் புனரமைக்குமாறு காங்கிரஸ் ஆட்சியாளர்கள் நிர்ப்பந்திக்கப்பட்ட போதிலும் மற்ற எல்லைப் பிரச்னைகளும் அப்படியே இருந்தன. நாட்டின் எஞ்சிய பகுதி மக்களுடன் முன்னேற வேண்டுமென்ற மலைவாசி மக்களின் அபிலாஷைகள், நதிநீர்ப் பங்கீடு சம்பந்தமான தகராறுகள், மத்திய—மாநில உறவுப் பிரச்னைகள் இவையெல்லாம் காங்கிரஸ் ஆட்சியாளர்கள் தோற்றுவித்தவை. அந்தந்த மாநிலங்களில் தங்களுடைய கட்சியின் குறுகிய நலனைக் கருதி காங்கிரஸ் ஆட்சியாளர் இப்பிரச்னைகளைத் தீர்க்காமல் முற்றவிட்டனர்.

ஜனநாயக இயக்கம் இல்லாதிருக்கும் அல்லது பலவீனமாக இருக்கும் இடங்களில் காங்கிரசுக்குள்ளும் வெளியிலும் இருக்கும் பிற்போக்குச் சக்திகள் மக்களுடைய உண்மையான குறைபாடுகளைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொள்ள முயன்றன. இந்த நிலைமையைத் தெலிங்கானாவிலும் கண்டோம். அங்கு காங்கிரஸ் தலைமையின் ஒரு பகுதி தனி தெலிங்கானா மாநிலக் கோரிக்கையை எழுப்பிற்று.

மகாராஷ்டிர-மைசூர் எல்லைத் தகராறை, இரு மாநிலங்களிலும் காங்கிரஸ் அரசே இருந்தும் தீர்க்க முடியவில்லை. மைசூருக்கு எதிரான போராட்டத்தில் மகாராஷ்டிர காங்கிரஸ், சிவசேனையைத் தூண்டிவிடும் அளவுக்குச் சென்றது. இதைப்போலவே காவேரி நீர்ப்பங்கீடு பிரச்னையும், வெவ்வேறு மாநிலங்களில் தொழில் நிறுவனங்களை நிறுவுதற்கான கிளர்ச்சிகளும் உள்ளன.

கால் நூற்றாண்டு காங்கிரஸ் ஆட்சி நாட்டின் ஒற்றுமையைக் காக்க தகுதியற்றது என்பதை நிரூபித்து விட்டது.

இந்தியாவில் மட்டுமின்றி மற்றெங்கும் பின்தங்கிய நிலைமையைப் போக்குவதற்கான வழி தேய்ந்து வரும் சமூக அமைப்பை மாற்றுவதுதான் என்பது அனுபவ வாயிலாக நிரூபணமாகியுள்ளது.

உண்மைக்குற்றவாளிகளை - காங்கிரஸ் ஆட்சியாளர்களை மறைப்பதற்கே—சமூக அமைப்பை புரட்சிகரமாக மாற்றும் அடிப்படைத் தீர்விலிருந்து மக்களின் கவனத்தைத் திசைதிருப்பி விடுவதற்கே பிற்போக்கு சக்திகள் பிரிவினைக் கிளர்ச்சிகளையும் இயக்கங்களையும் தூண்டிவிடுகின்றனர்; மேலும் ஒரு பகுதி மக்களுக்கு எதிராக இன்னொரு பகுதி மக்களை அவர்கள் ஏவிவிடுகிறார்கள். இந்த நிலைமையில் ஜனநாயக இயக்கத்தின் பொறுப்பு மகத்தானதாகும்.

பிற்போக்குப் பிரிவினை சக்திகளை எதிர்த்துப் போராடும்போதே பின்தங்கிய பகுதி மக்களுக்குச் சமத்துவம் கோரியும் போராடவேண்டும். மக்களுக்கு எதிரான காங்கிரசின் அடக்குமுறைக் கொள்கைகளையும் எதிர்த்துப் போராடவேண்டும்.

---

## கீழநத்தம் விவசாயிகள் போராட்டம் வெற்றி!

சிதம்பரம், செப். 17— சிதம்பரம் தாலுக்கா கீழநத்தம் கிராமத்தில் விவசாயத் தொழிலாளர்கள் கூலி உயர்வு கோரி செய்தஒரு நாள் வேலைநிறுத்தம் வெற்றிபெற்றது.

நடவுக்கு பெண்களுக்கு 5 லிட்டர் நெல் ஒருவேளை சாப்பாடும், ஆண்களுக்கு உழவு வேலைக்கு 9 லிட்டர் நெல் ஒரு வேளை சாப்பாடும், பணமாக கொடுத்தால் ஆண்களுக்கு 4-50ம். பெண்களுக்கு 2 50 என்றும் (நெல் விலைப்படி) கொடுக்க மிராஸ்தார்கள் ஒப்புக்கொண்டனர். விவசாயத்தொழிலாளர்கள் வேலைக்கு திரும்பினார்கள். மிராஸ்தார்களுடன் ஸ்தல வி. தொ. சங்க செயலாளர் கே. எஸ். ராமமூர்த்தி, எஸ். தங்கவேல், கலியன் மற்றும் பலர் பேசி மிராசுதார்களை இந்த ஒப்பந்தத்துக்கு இணங்க வைத்தனர்.

---

### தொழிலாளர்களுக்கு நியாயம் கோரினால்

# அமைதியைக் குலைப்பதாக குற்றம் சாட்டுவதா?

## சென்னைக் கூட்டத்தில் தோழர் வி. பி. சிந்தன் முழக்கம்!

சென்னை, செப் 18 — "தன் கொள்கை, பாரம்பரியம் எல்லாவற்றையுமே விட்டுவிட்டு தி. மு. க. விடம் போய் சரணடைந்திருக்கிறார். கருணாநிதியிடம் நக்சல்பாரி, நக்சல்பாரி என்று பேசவேண்டாம், நக்சல்பாரிகளைவிட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியினர்தான் நாட்டில் குழப்பம் விளைவித்து வருகிறார்கள் என்று சொல்லி அவரோடு ஒத்துப் பாடுகிறார், கல்யாணசுந்தரம் இவருக்கு இந்தநிலையா ஏற்படவேண்டும் என்று தோழர் வி. பி. சிந்தன் கேட்டார்.

அம்பத்தூர் தொழிற்பேட்டை அருகே சி. ஐ. டி யூ. வின் சார்பில் நடந்த பாராட்டுக் கூட்டத்தில் சிந்தன் கலந்துகொண்டு பேசினார் கூட்டத்திற்கு தோழர் பத்மநாபன் தலைமை வகித்தார் சிந்தன் மேலும் பேசியதாவது:—

நாங்கள் ஜனநாயகத்தின் மீதும் பாராளுமன்றத்தின் மீதும் நம்பிக்கை கொண்டவர்கள். அரசியல் சட்டம் தேவை தான், ஆனால் அந்த அரசியல் சட்டம் சாதாரண ஏழைகளுக்கு வாழ்வு அளிப்பதாக இருக்கவேண்டும். இல்லையேல் அந்த சட்டத்தைத் திருத்தியே ஆகவேண்டும். இதில் நாங்கள் உறுதியாகவே இருக்கிறோம்.

### அரசின் போக்குக்கு எதிராக அணி திரள்க!

தமிழ் நாட்டில் தி. மு. க. ஆட்சிஇப்போது தொழிலாளருக்கு எதிராக செயல் பட்டு வருகிறது. போலீசார் உதவியுடன் தி. மு. க. அரசு மற்ற கட்சிகளின் வசமுள்ளதொழிற் சங்கங்களைக் கைப்பற்றி வருகிறது.

தமிழக அரசின் இந்த தவறான செயலை தொழிலாளர்கள் நன்கு புரிந்து கொண்டுள்ளனர்.

தி. மு. க. அரசின் இந்த தவறான போக்குக்கு பாடம் புகட்ட தொழிலாளர்கள் அனைவரும் ஒரே அணியில் திரளவேண்டும்.

இப்பொழுது சில தொழிற் சங்க தலைவர்கள் முதலாளிகளிடம் பேரம்பேசிக்கொண்டு தொழிலாளர்களின் உண்மையான போராட்டத்தையும் கோரிக்கைகளையும் மட்டம் தட்டி வருகிறார்கள்,

கருணாநிதியின்ஆட்சி,தொழிலாளர்களுக்கு எந்தவிதமான நன்மையும் செய்யவில்லை. மாறாக தொழிலாளர்களை ஏமாற்றி அவர்களின் நியாயமான கோரிக்கைகளை இந்த அரசு நிராகரித்து வருகிறது.

### அதிகாரத்தினால் அடக்க முடியாது!

அரசின் இந்தப்போக்கைக் கண்டித்து தொழிலாளர்கள் மத்தியில் உண்மையை எடுத்துக் கூறினால், எங்களை அமைதியைக் குலைக்கிறார்கள் என்று கூறி சிறையில் அடைக்கிறார்கள். ஆனால் ஒன்று மட்டும் சொல்லிக்கொள்வேன். நாங்கள் எத்தனைமுறை சிறைசெல்லவும்தயாராக இருக்கிறோம். எங்கள் தோழர்கள் அஞ்சா நெஞ்சம் உடையவர்கள். எத்தனையோ அடக்குமுறையையும் கொடுமைகளையும் சந்தித்தவர்கள். துப்பாக்கிகுண்டிற்கு தங்கள் மார்பைத் திறந்துகாட்டியவர்கள். ஆகையால் எங்களை அதிகாரத்தினால் அடக்கிவிடலாம் என்று கருணாநிதி வீண் கனவு காணவேண்டாம்.

### நீங்களும் தப்ப முடியாது

குப்பைத் தொட்டியில் தூக்கி எறியப்பட்ட பாதுகாப்புச்சட்டத்தை தி. மு. க. அரசு எங்கள் மீது பிரயோகித்து வருகிறது. உண்மையான நியாயம் வழங்கப்படவேண்டும் என்று கோரினால், உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டத்தைபயன்படுத்துகிறார்கள்.

இவர்கள் மாநில சுயாட்சி கேட்டு கிளர்ச்சி செய்யும் போது இந்தச்சட்டம் இவர்களை என்ன செய்யப் போகிறதோ தெரியவில்லை.

கருணாநிதி பாலத்துக்கடியில் 'பாம்' என்கிறார். குண்டுபற்றி ஆராய்ச்சி நடக்கிறதாம். குண்டுவிசாரணையை பகிரங்கமாக நடத்த கருணாநிதி தயாரா?"

---

### கேரளத்தில்

# இரு மார்க்சிஸ்ட் கட்சி முன்னணி தோழர்கள் சுடப்பட்டுக் கொலை!

திருச்சூர், செப். 18— மார்க்சிஸ்ட் கட்சியின் தீவிர உறுப்பினர்களான தோழர் பி. கே, அப்துல்காதரும், தோழர் அகமுவும் நேற்று இங்கிருந்து 45 கி. மீ. தொலைவிலுள்ள எரியாட் என்ற இடத்தில் அடையாளம் தெரியாத, ஆயுதம் தரித்த ஐந்து பேர் கொண்ட கோஷ்டி ஒன்றால் சுட்டுப் படுகொலை செய்யப்பட்டனர்.

எரியாட்டில் உயர்நிலைப் பள்ளி முன்பு தோழர் அப்துல் காதரின் வீட்டருகே இந்தச்சம்பம் நிகழ்ந்தது. தோழர் அப்துல் காதரின் வாயிலும், நெஞ்சிலும், துப்பாக்கிக் குண்டுகள் பாய்ந்தன தோழர் அகமுவுக்கு கழுத்திலும் கையிலும் குண்டுகள் பாய்ந்தன.

துப்பாக்கியால் சுட்டதும் கொலையாளிகள் தப்பியோடி விட்டனர்.

தோழர்கள் அப்துல்காதரும் அகமுவும் மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்லப்பட்டனர். ஆனால் அவர்களுடைய உயிரைக் காப்பாற்ற முடியவில்லை

எரியாட் உயர்நிலைப் பள்ளியில் மாணவர் சங்கத்தின் தலைமையில் வேலைநிறுத்தம் நடைபெற்ற சமயத்தில் ஒரு பகுதி மாணவர் எதிர்த்தனர். இந்த நிலைமையை பார்வையிட அப்துல்காதரும், அகமுவும் வேறு சிலரும் சென்றிருந்தனர். அவர்கள் குப்பைத் தொட்டியருகே நின்று கொண்டிருந்தபோது ஐந்து பேர் அங்கு வந்து குழப்பம் விளைவித்தனர். ஒருவன் கத்தியால் குத்த முயற்சித்த போது அப்துல்காதர் அவன் கைகளைப் பிடித்துக் கொண்டார்.

அந்த சமயத்தில் அப்துல் காதர் துப்பாக்கியால் சுடப்பட்டார் அவர் மீது நான்கு குண்டுகள் பாய்ந்தன அகமு மீது இரண்டு குண்டுகள் பாய்ந்தன.

குண்டடிபட்ட தோழர்கள் இருவரும் கீழே விழுந்தனர்.

50 வயது நிரம்பிய அப்துல் காதர் அரசியல், சமூக, தொழிற்சங்கத் துறைகளில் தீவிரப்பணியாற்றி வந்தார்.

இவர் முன்னாள் காங்கிரஸ் எம் எல். ஏ. வாக இருந்தார் அக்கட்சியின் கொள்கையின் போக்கு பிடிக்காமல் மார்க்சிஸ்ட் கட்சியில் சேர்ந்தார்.

26 வயது நிரம்பிய மீனவரான அகமுக்கு மருத்துவ மனையில் அறுவைச் சிகிச்சை செய்யப்பட்டும் 10 நிமிடங்களில் இறந்தார்.

அகமு தன்னுடைய மரண வாக்கு மூலத்தில் கொலையாளிகளை அடையாளம் சொல்லியதாகக் கூறப்பட்டாலும் அவர்களுடைய பெயர்களை வெளியிட போலீஸ் மறுத்துள்ளது இன்னும் யாரையும் கைது செய்யவில்லை.

அப்துல்காதரும், அகமுவும் சுட்டுக் கொல்லப்பட்ட செய்தி எட்டியதும் திருச்சூர் நகரில் பரிபூரண அர்த்தால் அனுஷ்டிக்கப்பட்டது. போக்குவரத்தும் நின்றன. இந்தக் கொலைகளை வன்மையாகக் கண்டித்தும் குற்றவாளிகளைப் பிடித்து தண்டனையளிக்கக் கோரியும் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்களான தோழர்கள் ஈ. கே. இம்பிச்சிபாவாவும் அழிக்கோடு ராகவனும் அறிக்கை விடுத்துள்ளனர்.

---

## ரகசியத்தை காக்க அமெரிக்க அரசு படும்பாடு!

வாஷிங்டன், செப். 19— சமீபத்தில் இந்தோசீன யுத்தம் பற்றிய பெண்டகனின் ரகசிய தஸ்தாவேஜுகள் அம்பலமாகி சந்தி சிரித்தது உலகறிந்த செய்தி. அமெரிக்க நாட்டின் பாதுகாப்பு இலாகா இப்போது ஒரு புதிய கட்டிடத்தைக் கட்டத் திட்டமிட்டிருப்பதாக செனட்டர் வில்லியம் பிராக்ஸ்மிர் கூறியுள்ளார். இதனைக் கட்டி முடிக்க 14 கோடியே 49 லட்சம் டாலர் செலவாகுமாம். இவ்வளவு செலவில் ஒரு கட்டிடம் கட்டுவதற்கு அவசியம் என்ன வந்தது? இந்தோ சீன யுத்தம் பற்றிய ரகசிய தஸ்தாவேஜுகளைப் பத்திரமாகப் பாதுகாத்து வைப்பதற்கேற்ற பிரத்தியேக இரும்புப் பெட்டிகளும், உறுதிவாய்ந்த அறைகளும் கொண்டதாக இந்தப் புதிய கட்டிடம் இருக்க வேண்டும் என்று தீர்மானித்தது தான் இதற்குக் காரணம் என்று தகவலறிந்த வாஷிங்டன் வட்டாரங்கள் கூறுகின்றன.

---

## ஆசிரியருக்கு வரையும் மடல்

# பஸ் கட்டணத்தைக் குறைத்திடுக!

ஐயா!

நெல்லை மாவட்டம் சங்கரன்கோவில் தாலுகாவில் கழுகுமலைக்கும் தேவர் குளத்திற்கும் இடையில் அப்ரானந்தம் என்ற பெயரில் ஓர் டவுன் பஸ் ஓடுகிறது.

எங்கள் ஊரான அச்சம்பட்டியிலிருந்து கழுகுமலைக்கு நான்கு மைல் தூரம்தான். இந்த வண்டியில் கழுகுமலையிலிருந்து அச்சம்பட்டிக்கு சார்ஜ் 40 காசு வாங்குகிறார்கள். அதே சமயத்தில் மற்ற வண்டிகளில் 30 காசுகள்தான் வாங்குகிறார்கள். ஒருமைலுக்கு 5 காசு வீதமும், குறைந்தபட்சம் 30 காசுதான் வாங்க வேண்டும். ஆனால் இந்த பஸ்ஸில் 40 காசு வாங்குவது அநியாயம். 10 காசுகள் அதிகம் வாங்குகிறார்கள். இப்படி மற்ற பஸ்களைவிட அதிகக் கட்டணம் வாங்குவதைக் குறைக்கக்கோரி, போக்குவரத்து அதிகாரிக்கும், பஸ் முதலாளிக்கும், நானும் தோழர் சு. பாலவிநாயகமும் நேரில் சந்தித்தும், பல கடிதங்கள் மூலம் பலமுறை கோரியும் எவ்வித நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

இந்த பஸ், போக—வர மொத்தம் 12 தடவை செல்கிறது இதன்மூலம் அதிக லாபம் அடிக்கிறது.

எனவே, தமிழக அரசும், அதிகாரிகளும் இந்தக் கொள்ளையைத் தடுத்து நிறுத்துவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டுகிறேன்.

இப்படிக்கு,

புண்ணைவனத்தேவர்,

அச்சம்பட்டி

---

### மதுரையில் பவர்லூம் தொழிலாளர்கள்

# வேலை நிறுத்தம்!

மதுரை செப். 13

மதுரை முனிச்சாலை பகுதியிலுள்ள 160 பவர்லூம் பாக்டரிகளில் வேலை செய்யும் 1500 தொழிலாளர்கள் செப் 16-ந்தேதி இரவு 12மணியிலிருந்து வேலை நிறுத்தம் செய்து வருகிறார்கள்.

ஊதிய உயர்வு கோரி நடைபெறும் இந்தப் போராட்டம் ஐக்கிய கமிட்டியின் தலைமையில் நடைபெறுகிறது.

இருதரப்பினரையும் அழைத்து வைத்து பேச்சு வார்த்தை நடத்துமாறு கலெக்டர் ஆலோசனை கூறியதற்கேற்ப லேபர் ஆபீசர் முன்னிலையில் நடைபெற்ற பேச்சு வார்த்தையில் முதலாளிகள் பிடிவாதமாகக் கூலி உயர்வு கோரிக்கையை ஏற்க மறுத்தனர்.

இந்த நிலைமையில் வேலை நிறுத்தப் போராட்டம் தொடங்கியுள்ளது.

---

### மேற்கு வங்கத்தில்

## அரசு ஊழியர் வேலை நிறுத்தம் நீடிக்கிறது.

கல்கத்தா, செப்-16 அரசு ஊழியர் சங்க தலைவர்கள் வேலை நீக்கம் செய்யப்பட்டதைக் கண்டிக்கும் முறையில் மேற்கு வங்க முழுவதும் அரசு ஊழியர்கள் தொடங்கியுள்ள வேலை நிறுத்தம் தொடர்ந்து நடைபெறுகிறது.

தலைமைச் செயலகத்தில் ஊழியர்கள் காலையில் அலுவலகத்துக்கு வந்து ஆஜர் பட்டியலில் கையொப்பமிட்டுவிட்டு வெளியேறிவிட்டார்கள். அலுவலகத்தில் மின் விளக்குகளையும் விசிறிகளையும் நிறுத்துவதற்குக் கூட ஆளில்லை.

தலைமையதிகாரிகள் மட்டும் ஆசனத்தில் அமர்ந்து கொண்டிருந்தனர்.

---

## குறிப்புகள்

# போலீசின்சித்திரவதை: நீதிபதியின் கண்டனம்

போலீஸ் ஒருவரை கைது செய்தால் சட்டப்படி செய்யவேண்டியது என்ன? அந்த நபரை லாக்கப்பில் வைத்திருந்து, 24 மணி நேரத்திற்குள் மாஜிஸ்ட்ரேட்டின் முன்ஆஜர்படுத்தவேண்டும். இந்திரா காந்திஅரசின் நேரடி நிர்வாகத்தில் இருக்கும் மேற்கு வங்கத்தில் இது நடப்பதில்லை.

சிறைச்சாலைகளில்சித்திரவதைசெய்யப்படுகிறார்கள் கிட்டத்தட்டஉயிர் போகும் வரை அடித்து நொறுக்கப்படுகிறார்கள்.

பலர் சிறைச்சாலைகளிலிருந்து உயிருடன் திரும்புவது கூட கிடையாது.

போலீஸ் லாக்கப்அறைகளுக்கு பேசும் சக்தி இருக்குமானால், அது கூறும் அந்த ரத்தக்கரை படிந்த கதைகளை -போலீஸ் உடையில் குண்டர்கள் புரியும் கொடுமைகளை!

அலிப்பூர் சப்—டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட் இப்போது இதைப் பற்றி குறிப்பிட்டுள்ளார்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த சோனாபூர் நகர் கமிட்டி உறுப்பினர் தோழர் நாராயன் ராய் சௌத்திரிக்கு போலீஸார் செய்த கொடுமையைப் பற்றி குறிப்பிட்டுள்ளார். நாராயன் ராய் சௌத்திரியின் பின் கழுத்தில் போலீஸ் கூர்மையான ஆயுதம் கொண்டு "சி. பி. எம்." என்ற எழுத்துக்களைத் தோண்டிய கொடுமையைக் குறிப்பிடுகிறார்.

கீழே அந்த மாஜிஸ்ட்ரேட் ஆகஸ்ட் 30-ம்தேதி கூறியதைப் பிரசுரிக்கிறோம்.

"நாராயன் ராய் சௌத்திரியை கைது செய்தற்கான காரணங்களை விளக்கும் போலீஸ் விசாரணை அதிகாரியின் முறையீட்டைப் பார்த்தேன். சோனாபூர் போலீஸ் நிலையத்தின் வழக்கு சம்மந்தமாக, நாராயன் ராய் சௌத்திரி கோர்ட்டில் கொண்டுவந்து நிறுத்தப்பட்டார். கைது செய்தற்தற்கான முறையீடு ஏற்றுக் கொள்ளப்பட்டது.

"நாராயன் ராய் சௌத்திரியை 5 நாட்கள் போலீஸ் லாக்கப்பில் வைத்திருப்பதற்கான போலீஸ் விசாரணை அதிகாரியின் சிபார்சையும் பார்த்தேன் குற்றம் சாட்டப்பட்டவர் தன்னை சோனாப்பூர் போலீஸார் மிருகத்தனமாக அடித்தார்கள் என்று குற்றம் சாட்டினார். எதிரிகள் வக்கீலும் ஜாமீன் மனு தாக்கல் செய்தார். அவரும் குற்றவாளியை மிருகத்தனமாக போலீஸார் அடித்தார்கள் என்று கூறினார். மேலும் சோனாபூர் போலீஸார் குற்றவாளியின் பின் கழுத்தில் 'சி. பி. எம்.' என்ற எழுத்துக்களைத் தோண்டிய மிருகத்தனத்தை குறிப்பிட்டார்.

"எதிரியை என்முன் ஆஜர் செய்தபோது நானும் அதைப்பார்த்தேன். மேலும் இன்னும்பல ரத்தக்காயங்களை எதிரியின் உடல் முழுவதிலும் கண்டேன்.

மிகப்பெரிய ஆச்சரியம் என்ன வெனில், இந்தக் காயங்களைப் பற்றி போலீஸ் விசாரணை அதிகாரியின் ரிப்போர்ட்டில் மூச்சுக்கூட விடவில்லை. மேலும் அந்தக் காயங்களுக்கு சிகிச்சை அளிப்பது பற்றியும் குறிப்பிடவில்லை.

போலீஸ் காவலில் வைப்பதற்கான வேண்டு கோளை நிராகரிக்கிறேன் எதிரியை ஜெயில் பாதுகாப்பில் 9—9—71வரை வைத்திருக்க வேண்டும். அலிப்பூர் மருத்துவ அதிகாரி, எதிரிக்கு அலிப்பூர் சென்ட்ரல் சிறைச்சாலை மருத்துவ நிலையத்தில் சிகிச்சைசெய்ய வேண்டும்."

இவ்வாறு அந்த மாஜிஸ்ட்ரேட் தன்னுடைய குறிப்பில் குறிப்பிட்டுள்ளார்.

அந்த மாஜிஸ்டிரேட் மேலும் கூறியிருப்பதைப் பாருங்கள்.

"போலீஸ் அதிகாரி, எதிரிக்கு இந்த ரத்தக் காயங்கள் எப்படி ஏற்பட்டது என்பதுபற்றி ரிப்போர்ட் தரவேண்டும்.

"எதிரியின் குற்றச்சாட்டு உண்மை என்றால், இதைக்காட்டிலும் காட்டுமிராண்டித்தனம் கிடையாது. இந்த நாட்டு பிரஜைகளின் உயிருக்கு இந்த வன்முறையில் ஈடுபடும் போலீஸார் கையில் பாதுகாப்பு இல்லை. மேலும் நாம் ஒரு போலீஸ் ராஜ்யத்தில் இருக்கிறோம் என்றுதான் சொல்லியே ஆகவேண்டும்.

இந்தக் குற்றச்சாட்டின் கடுமையைக் கணக்கிலெடுத்துக் கொண்டு, 24 பர்கானா போலீஸ் சூப்பிரண்டெண்ட் இந்த விஷயத்தில் தேவையான நடவடிக்கை எடுப்பார் என நம்புகிறேன்.

ஜாமீன் மனுவை ஏற்றுக் கொண்டேன். 9-9-71க்கு இந்த வழக்கை ஒத்திவைக்கிறேன்."

மேற்கு வங்க சர்க்கார் ஊழியர்களிடம் கட்டுப்பாட்டை நிலைநாட்டப் போவதாகத் துடிக்கும் மேற்கு வங்க கவர்னர் டயஸைக் கேட்கிறோம்! மந்திரி சித்தார்த்த சங்கர்ராயைக் கேட்கிறோம்!

நீதிமன்றத்தால் சாட்டப்பட்ட, போலீஸாரின் கொடுமைகளைப் பற்றிய குற்றச்சாட்டிற்கு என்ன செய்யப் போகிறீர்கள்?

—பீப்பிள்ஸ் டெமாக்கரசி

---

## பொய்ச் செய்தி வெளியிட்ட பத்திரிகை

### அவனியாபுரத்தில் கொளுத்தப்பட்டது!

மதுரை, செப். 17— மதுரை தாலுகா அவனியாபுரத்தில் 11—9—71ல் மாலை 7 மணிக்கு, சென்னையில் தொழிற்சங்க தலைவர்கள் விடுதலையான செய்தியை எழுதி கொடுத்து விடுதலை ஆனார்கள், என்று பொய்யாக செய்தி வெளியிட்டு மக்களைக் குழப்பியதைக்கண்டித்துசுமார் 300பேர்கள் மத்தியில் தோழர் கே. சுப்பையா தலைமையில் தோழர்கள் சுந்தரம் எஸ். பாண்டி,அயோத்தி ஆகியோர் மாலைமுரசுதினத்தந்தி பத்திரிகைகளை தீயிட்டு கொளுத்தினார்கள். உண்மை விவரங்களை கே. சுப்பையா சுந்தரம் ஆகியோர்விளக்கிப் பேசினர்.

## சி. ஐ. டி. யூ. வார பொதுக் கூட்டம்

மதுரை, செப். 19— சி. ஐ. டி. யூ. வார பொதுக் கூட்டம் செப். 13-ல் தோழர் வி. வாழவந்தான் தலைமையில் மோதிலால் மெயின்ரோட்டில் நடந்தது.

தோழர்கள் நன்மாறன், வி. எஸ். மணி, என். ஆர். பழனிச்சாமி ஆகியோர் பேசினர்.

---

# செப்டம்பர் 26-ல் விலைவாசி உயர்வு எதிர்ப்பு ஆர்ப்பாட்டம்! இன்றிருந்தே தயாராகுக!

தமிழகமெங்கும்

# 25 ஆயிரம் மின் ஊழியர் ஆர்ப்பாட்டம்!

சென்னை, செப்- 18

தமிழ்நாடு மின்சாரத் தொழிலாளர்களின் மத்திய அமைப்பின் வேண்டுகோளுக்கிணங்க செப் 17 அன்று சுமார் 25000 தொழிலாளர்களும் அலுவலக ஊழியர்களும் தமிழ்நாடு முழுவதும் வாரிய அலுவலகங்களின் முன்னால் ஆர்ப்பாட்டங்களையும் ஊர்வலங்களையும் பொதுக் கூட்டங்களையும் நடத்தி, "கண்டன தினம்" அனுஷ்டித்துள்ளனர். கூடுதல் போனஸ் பெற, பேலன் ஷீட் கொடுத்து பேசப்படுவது, நாட்கூலிதொழிலாளர்களுக்கு வருடாந்திர சம்பள உயர்வு, வாரிசுகளுக்கு வேலைவாய்ப்புப் போன்ற பல பிரச்னைகள் தீர்வு காணப்படாமல் தேங்கி நிற்பதை யடுத்தே இக்கண்டன தினம் அனுஷ்டிக்கப்பட்டது.

இதனால் மின்வாரியமும் தமிழக அரசும் பிரச்னைகளை தீர்க்காமல் மேலும் சாலங்கடத்துமானால் மத்தியஅமைப்பின்செயற்குழு செப் 27ல் நெல்லிக்குப்பத்தில் கூடி வேலைநிறுத்த நோட்டீஸ் கொடுப்பது உள்பட தேவையான எல்லா நடவடிக்கைளையும் எடுக்க முடிவு செய்து செயல்படும் என்று அறிவிக்கப்படுகிறது.

இப் பொதுப் பிரச்னையில் அனைத்து மின்துறை சங்கங்களும் மத்தியஸ்தாபனங்களும் இணைந்து போராட வாரீர் என மத்தியஅமைப்புஅழைப்பு விடுத்துள்ளது.

### மதுரையில்

மதுரை மின் திட்ட மத்திய அலுவலகத்தின் முன்பு பல நூற்றுக்கணக்கான மின்சார ஊழியர் கரங்களில் கொடிகளை ஏந்தியவாறுகோரிக்கைமுழக்கமிட்டு கண்டன ஆர்ப்பாட்டம் செய்தனர். இந்த ஆர்ப்பாட்டத்திற்கு தோழர் ஜி ஜி சுந்தரம் தலைமைவகித்தார். இதில் மதுரை-இராமநாதபுர திட்ட பொதுச் செயலாளர் தோழர் ஈ. தங்கராஜும் கலந்து கொண்டார்.

### பசுமலை

இங்கு, நூற்றுக்கும் அதிகமான ஊழியர்கள் கண்டன ஆர்ப்பாட்டத்தில் கலந்து கொண்டனர் இதில் தோழர்கள் ஈ. தங்கராஜ், ஜி. ஜி. சுந்தரம் ஆகியோர் கலந்து கொண்டனர்.

### திருப்புவனத்தில்

இங்கு, மின் இலாகா மேற்பார்வையாளர் அலுவலகத்தின் முன்பு, நூற்றுக்கணக்கான மின்சார ஊழியர்கள் கண்டன ஆர்ப்பாட்ட முழக்கம் எழுப்பினர். அன்று மாலை பொதுக்கூட்டமும்நடைபெற்றது அதில் தோழர்கள் ஈ. தங்கராஜ், எம் வின்சென்ட ஆகியோர் பேசினர்.

### திருமங்கலத்தில்

இங்கு. மின் வாரிய அலுவலகங்களுக்கு முன்பு பெருந்திரளான ஊழியர்கள் கண்டன ஆர்ப்பாட்டம் செய்தனர் அன்றுமாலைபொதுக்கூட்டமும் நடைபெற்றது. அதில், தோழர்கள் எஸ். மன்னூர்சாமி ஏ. அப்துல் வஹாப் ஆகியோர் பேசினர்.

தனது கோரிக்கைகளை கொண்ட தீர்மானத்தை தமிழக முதலமைச்சர், தொழில் உறவு அதிகாரி, மின் வாரிய பொறியாளர் — ஆகியோருக்கு மின்சார ஊழியர்கள் சங்கம் அனுப்பியுள்ளது.

# சட்டத்தை மீறுபவர்கள் யார்?

## முதலமைச்சருக்கு

### மின் ஊழியர் சங்கத் தலைவர் கேள்வி

சென்னை, அக். 18—

போனஸ் கோரி ஆர்ப்பாட்டம் செய்த மின்சார வாரியத்தின் ஊழியர்களின் செய்கை சட்ட விரோதமானது அல்ல என்றும் சட்டத்தை மீறுவது மின்சார வாரியமே என்றும் தமிழ்நாடு மின்சார ஊழியர் சங்கத்தின் தலைவர் டி ஜானகிராமன் ஓர் அறிக்கையில் கூறியுள்ளார். அந்த அறிக்கையில் அவர் கூறியிருப்பதாவது:

மின் வாரியத்தில் கணக்காயர் நண்பர்கள் சிலர்செப்.13ல் கூடுதல் போனஸ் வேண்டுமென்றும் இதர கோரிக்கைகளுக்கும் அலுவலகத்தின் உள்ளேயிருந்தும் அலுவலக நேரத்திலும் ஆர்ப்பாட்டம் நடத்தினர்கள். இது சட்ட விரோதமானதென்றும் வன்மையான நடவடிக்கை மேற்கொள்ளப்படும் என்று தமிழக முதலமைச்சர் எச்சரிக்கை விடுத்துள்ளார்கள். உண்மையில் சட்டத்தையும் செய்து. கொண்ட ஒப்பந்தங்களையும் மீறுபவர்கள் மின் வாரிய நிர்வாகமாகும். போனஸ் சட்டம் (1965) படி ஒவ்வொரு ஆண்டும் தணிக்கை செய்யப்பட்ட கணக்கையும், பேலன்ஸ் ஷீட்டையும் ஒர்க்கிங் ஷீட்டையும் பதிவு செய்யப்பட்ட சங்கப் பிரதிநிதிகளிடம் கொடுத்து பேசிமுடிவுசெய்யப்படவேண்டும். இதுவரை ஒரு ஆண்டுகூட இந்த சட்டவிதிமுறையை மின்வாரியம் மதித்ததில்லை ஒருதலைபட்சமாகவே 4சதவிகிதம் என்று முடிவு செய்து வருகிறது. பிராவிடன்ட் நிதி சட்டப்படி, எந்தத் தொழிலாளியும் 240 நாட்களுக்கு மேல் வேலை செய்திருந்தால் பிரவிடென்ட் நிதி பிடிக்க வேண்டுமென்று கூறுகிறது. ஆனால் கடந்த 5ஆண்டுகளுக்குமேல் இப்படிப்பட்ட சுமார் 16,000 தொழிலாளர்களுக்கு பிராவிடன்ட் நிதி பிடிக்காமல் சட்டத்தை அவமதித்து வருகிறது. நேரடிப் பேச்சின் மூலம் வேலைப்பளு ஒப்பந்தங்கள் செய்துகொள்ளப்பட்டன அந்த ஒப்பந்தத்தில் 50சதவிகிதத்துக்கு மேல் அமுல் நடத்தப்படும் என்று ஒருதலைப் பட்சமாகமுடிவு எடுத்து சட்டத்தை வாரியம் மீறுகிறது. சட்டப்படி தொழில பிரச்னையை தொழில் ஆணையாளர் முன்னால் எழுப்பினால் தொழில் சமரசப் பேச்சை துவங்க மறுப்பதின் மூலம் தொழில் தகராறு சட்டத்தை தொழில் இலாகா மீறுகிறது. இதனை தமிழக முதலமைச்சர் கண்டிக்காமல் மௌனம் சாதிப்பது வேதனையளிப்பதாகும்.

# எஞ்சினியரிங் தொழிலில் நெருக்கடி!

## அரசு உடனடியாக நடவடிக்கை எடுக்க முன்வரவேண்டும்

### சி. ஐ. டி. யூ. தீர்மானம்

மதுரை, செப். 17—

1971 ஜூலை 16, 17, 18 தேதிகளில் மதுரையில் நடைபெற்ற சி. ஐ. டி. யூ. மாநில மாநாட்டில் எஞ்சினியரிங் தொழில் பற்றி நிறைவேற்றப்பட்ட தீர்மானம் வருமாறு:—

இன்று சிறிய, நடுத்தர எஞ்சினியரிங் தொழிற்சாலைகளுக்குத் தேவையான மூலப் பொருட்கள் காலாகாலத்தில் கிடைக்காத காரணத்தினாலும் பம்புசெட் மோட்டார்கள் ஆயில் எஞ்சின் போன்ற உற்பத்தியான பொருட்கள், விற்பனையாகாமல் தேங்கி கிடப்பதாலும், ஆட்குறைப்பு லே-ஆப், தொழிற்சாலைகளை மூடுதல் போன்ற நிலைமை நீடித்து வருகிறது.

மேலும், முதலாளிகள், அதிக லாப நோக்கத்தோடு, தொழிற்சாலைகளை, சிறு, சிறு பிரிவுகளாக, பிரித்து தனித் தனித் தொழிற்சாலைகளாக பதிவு செய்து நடத்த முற்பட்டு வருகிறார்கள். அத்துடன் காண்ட்ராக்ட் முறையில் தொழிற்சாலைகளையே மாற்றியமைப்பது, தொழிற்சாலைகளில் மொத்தமிருக்கும் தொழிலாளர்களில் பெரும் பகுதியை அப்ரன்டீஸ்களாகவும், டெம்பரவரி, காஷுவல் பீஸ்ரேட் முறைகளினாலும் வைத்து தொழிலாளர்களுக்கு, லே-ஆப் காம்பன்சேஷன், இ. எஸ். ஐ. பிராவிடண்ட் உரிமைகளை மறுப்பது சம்பள உயர்வு, போனஸ் போன்ற கோரிக்கைகளையும் மறுப்பது ஆகியநடைமுறைகள் கையாளப்படுகின்றன.

எனவே தமிழக அரசு உடனடியாக இத்தகைய எஞ்சினியரிங் தொழிற் சாலைகளுக்கு தேவையான, கோக், பிக்-அயர்ன், காப்பர், ஸ்டீல் இதர வகை தகடுகள் உட்பட எல்லா மூலப் பொருட்களும், நியாய விலையில், காலாகாலத்தில் கிடைக்கவும், தேங்கிக்கிடக்கும் பம்பு மோட்டார், ஆயில் எஞ்சின் போன்றவைகளை, அரசாங்கமே வாங்கி விவசாயிகளுக்கு கடனாக வினியோகிக்கவும், தேவையானால், வெளி மாநிங்களிலும், வெளிநாடுகளிலும், மார்க்கெட் பிடிக்கவும், நடவடிக்கை எடுக்கவேண்டும். மேலும், பெரிய தொழிற்சாலைகளை சிறு, சிறு பிரிவுகளாக பிரிப்பதையும், காண்ட்ராக்ட் முறையில் தொழில் ஆக மாற்றுவதையும், தடுத்து நிறுத்துவதோடு 50 பேர்களுக்கு குறைவாக இருந்தாலும். லே-ஆப் காம்பன்சேஷன் கிடைக்கும்படியும், 20 பேர்களுக்கு குறைவாக இருந்தாலும், இ எஸ் ஐ பிராவிடன்ட் பண்டு ஆகியவை பிடிக்கப்படவும். சட்டத்தில் திருத்தம் கொண்டு வரவும், இ. எஸ். ஐ. திட்டத்தை மாநிலம் முழுவதிலும் விஸ்தரிக்கவும், நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று இந்த மாநாடு தமிழக அரசை வற்புறுத்திக்கேட்டுக் கொள்ளுகிறது.

மேற் கூறப்பட்ட கோரிக்கைகளை வற்புறுத்தியும், எஞ்சினியரிங் சம்பள போர்டில் தொழிலாளர்கள் தரப்பில் சமர்ப்பித்துள்ள கோரிக்கைகளை அங்கீகரித்து அமுல்நடத்தும்படியும், எஞ்சினியரிங் தொழிலாளர்கள் அனைவரும் தொடர்ந்து இயக்கங்களும், கிளர்ச்சிகளும் நடத்தவேண்டுமென்று எல்லா எஞ்சினியரிங் தொழிலாளர்களையும் சங்கங்களையும் இந்த மாநாடு கேட்டுக்கொள்கிறது.

காவேரி மில்

# டெம்பரரி தொழிலாளர் ஆர்ப்பாட்டம்!

திருச்சி, செப். 18 —

காவேரி மில் பிரச்சினைசம்பந்தமாக சமரசப்பேச்சுவார்த்தை இங்கு 6-8-71-ல் நடந்தது. இந்த சமரசப்பேச்சுவார்த்தையின்போது ஸ்பெசல் டெபுடி லேபர் கமிசனர் காவேரி மில் மேனேஜரைப் பார்த்து டெம்பரரித் தொழிலாளர்களுக்கு மில் நிர்வாகம், தான் நினைத்த கூலியைக் கொடுப்பதுசரியல்ல நிர்ணயிக்கப்பட்ட வேலைப் பளுவை ஒரு தொழிலாளி பார்க்கும்போது அதற்கென்று நிர்ணயிக்கப்பட்ட சம்பளமே தரவேண்டும் என்று கூறினார்.

இவ்வாறு கூறிய பின்னரும் மில் நிர்வாகம், அவ்வாறு கொடுக்கவில்லை. மாறாக நிர்வாகம், 160 டெம்பரரித் தொழிலாளர்களுக்கும் சராசரி மாதம் 10 நாட்கள் வேலை மட்டுமே கொடுத்து அதற்கு தினசரி ரூ. 3-50 எனக் கூலி கொடுத்தும் வருகிறது.

மேலும், ரீலிங், வைண்டிங் பகுதியில் வேலைபார்க்கும் தொழிலாளர்களுக்கு நிரந்தரத் தொழிலாளிக்கு, நிர்ணயிக்கப்பட்ட வேலை அளவுக்கு குறைவாக எடுக்கின்றாய என்று காரணம் கூறி ரூ. 3-80 கூலியையும் குறைத்து சராசரி ரூ. 1-75 கூலி கொடுக்கிறது.

இந்தக் கொடுமையினை எதிர்த்து டெம்பரரித் தொழிலாளர்கள் அனைவரும் கடந்த 16-9-71 அன்று, இந்தப் பிரச்சினையில் அரசு தலையிடக்கோரி முழக்கங்கள்முழங்கிக்கொண்டு காவேரி நகரிலிருந்து புதுக்கோட்டைக்கு ஊர்வலமாகச் சென்றனர். தோழர்கள் சி.கே. ரெங்கசாமி, எம். ராமச்சந்திரன் ஆகியோர் தலைமை தாங்கினர்.

கோட்ட ஆட்சி அலுவலகம் முன்பு ஆர்ப்பாட்டம் செய்து மகஜர் கொடுத்தனர். (ந. நி.)

சி. ஐ. டி. யூ. வாரம்

## காவேரி மில் முன்பு ஆர்ப்பாட்டம்

புதுக்கோட்டை செப்-18

சி. ஐ. டி. யூ. பிரச்சார வாரத்தை முன்னிட்டு காவேரி மில்கேட் முன்பு ஆர்ப்பாட்டமும், 14 வ ஷிப்டு வாரியாக கொள்கை விளக்கப்பிரச்சாரப் பொதுக்கூட்டங்களும் நடைபெற்றன.

கூட்டங்களில் தோழர்கள், சி. கே. ரெங்கசாமி, டி. பிளமின்தாஸ், சி. எஸ். பொன்னுசாமி, எஸ். அழகர்சாமிநாயுடு எம். பொன்னு முதலிய முன்னணித் தோழர்கள் மேற்கு வங்க மக்களைப் படுகொலை செய்யும் மத்திய காங்கிரஸ் அரசாங்கத்தைக் கண்டித்தும். தி. மு. க. அரசின் தொழிலாளர் விரோதக் கொள்கையையும், அடக்குமுறைக் கொள்கைகளையும் கண்டித்தும், வேலையில்லாக் கொடுமைகளைப் பற்றியும் பேசினர்.

(ந. நி)

### தீக்கதிர் வளர்ச்சி நிதி

திருப்பூர்5வதுவார்டு முருகேசின் ஆண் குழந்தைக்கு 'பூபதி' என்று செப் 12ல் தோழர் ஆர். விஸ்வநாதன் பெயர் சூட்டியதைமுன்னிட்டு ரூ.2-ம் மின் வாரிய ஊழியர் ஒருவர் அளித்த ரூ.1 ஆக ரூ 3. தோழர் விஸ்வநாதன் மூலம் தீக்கதிர் வளர்ச்சிக்காக வழங்கப்பட்டது.

செப், 2-ல் தோழர் எஸ் எம். கருப்பண்ணன்—நல்லம்மாள் திருமண விழாவின் போது, தீக்கதிர் வளர்ச்சிநிதியாக வழங்கப்பட்ட நன்கொடை ரூ. 5-00.

ஃ ஃ ஃ

கோவை ஆனந்தகுமார் மில் தொழிலாளி தோழர் நாராயணன் - அமராவதி திருமணத்தின்போது அளித்த தீக்கதிர் வளர்ச்சி நிதி ரூ. 10-00.

# மாணவர்கள் அரசியலில் பங்கெடுத்தாக வேண்டும்!

சென்ற கட்டுரையில் மாணவர்கள் போராட்டத்திற்கான காரணமென்ன என்பது பற்றி விளக்கப்பட்டிருந்தது.

அடுத்து மாணவர்கள் பிரச்னைகள் தீர்ப்பதற்கான வழிகளைப் பற்றிப் பார்ப்போம்.

இன்றைய தினம் மாணவர்கள் போராட்டத்தைத்தவிர்ப்பதற்கும், பிரச்னைகளைத் தீர்ப்பதற்கும் சர்வரோக நிவாரணியாக "மாணவர்கள் அரசியலில் பங்கெடுக்கக் கூடாது, அரசியலை விட்டு ஒதுங்கி வாழ வேண்டும்" என்று இந்திராகாந்தி முதல் கருணாநிதி வரை, எல்லா முதலாளித்துவ தத்துவாசிரியர்கள் உட்பட உபதேசம் செய்து வருகிறார்கள்.

இவர்களெல்லாம் அரசியல் அதிகாரத்திற்கு வருமுன் கூறியதென்ன? மாணவர்களுக்கும் அரசியல் வேண்டுமென்பதே. இன்று இவர்கள் ஏன் இப்படி தலைகீழாக மாறுகிறார்கள் என்பதைத் தெளிவு படுத்துவதற்கு முன் மாணவர்களுக்கு அரசியல் ஏன் அவசியம் என்பதைப் பார்ப்போம்.

உலகமெங்கும் நடக்கும்படியான மாணவர் இயக்கங்கள் நமக்கு போதிப்பதென்ன?

### வியட்நாம் மாணவர்கள்!

சின்னஞ் சிறிய வியட்நாம் நாட்டை எடுத்துக்கொள்வோம். வியட்நாம் மாணவர்கள் ஒரு கையில் புத்தகத்தையும், மறு கையில் துப்பாக்கியையும் ஏந்திக்கொண்டு இருக்கிறார்கள். ஆம்! படிக்கின்ற அதே வேளையில் தங்கள் நாட்டின் ஒற்றுமைக்காகவும் தேச சுபீட்சத்திற்காகவும் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் ஆக்கிரமிப்பை எதிர்த்துப் போராடி வருகிறார்கள்.

இந்தப் போராட்டத்திலிருந்து மாணவர்கள் ஒதுங்கி நிற்க முடியுமா?

ஒதுங்கி நிற்பார்களேயானால் அது வியட்நாமிற்கிழைக்கும் துரோகமாகும் இது அரசியல் இல்லையா? நிச்சயமாக அரசியலே. ஏகாதிபத்திய எதிர்ப்பு அரசியலாகும்.

### ஜப்பானிய மாணவர்கள்!

ஜப்பானிலே ஒருக்கப்படியான பல லட்சக்கணக்கான மாணவர்கள் தங்கள் நாட்டை அமெரிக்கா தன்னுடைய படைத் தளமாக மாற்றி வருவதை எதிர்த்துப் போராடி வருகிறார்கள்.

1968-ம் ஆண்டுப் போராட்டத்தில் ஏராளமான மாணவர்கள் தங்கள் இன்னுயிரை ஈந்துள்ளனர். நூற்றுக்கணக்கான மாணவர்கள் படுகாயப்படுத்தப்பட்டனர். கைது செய்யப்பட்டனர். இது அரசியல் இல்லையா? நிச்சயமாக அரசியலே. இந்த அரசியலில் ஜப்பானிய மாணவர்கள் ஈடுபடவில்லையென்றால், அது தங்கள் நாட்டை அமெரிக்காவின் பிடியிலிருந்து காக்கும் போராட்டத்தில் தங்கள் பங்கைச் செலுத்தத் தவறுபவர்கள் ஆவார்கள்.

### அமெரிக்க மாணவர்கள்!

அமெரிக்காவில் இருக்கும் மாணவர்கள் நிக்சனின் அரசாங்கத்தை எதிர்த்துப் போராடுகிறார்கள் ஏன்? தங்களுடைய சொந்த நலன்களுக்காக மட்டுமா? இல்லை. வியட்நாம் மக்களுக்கு ஆதரவாக. அங்கே போராடும் தன்னுடைய சகோதர மாணவர்களுக்காக. போர் வெறி பிடித்த நிக்சன் அரசாங்கம் வியட்நாமில் நடத்தி வரும் குரூரமான, அநீதியான ஆக்கிரமிப்புப் போரை எதிர்த்துத் தான் அவர்கள் போராடி வருகிறார்கள். இது அரசியல் பிரச்னை அல்லவா? யாரும் மறுக்க முடியாது. இந்த அரசியல் போராட்டத்தில் அமெரிக்க மாணவர்கள் பங்கு கொள்ளவில்லையெனில் அது தன்னுடைய சகோதர மாணவர்களுக்கு இழைக்கும் அநீதியாகாதா?

### பிரான்ஸ் மாணவர்கள்!

பிரான்ஸில் கடந்த சில ஆண்டுகளுக்கு முன் பிரான்சையே உலுக்கியபிரமாண்டமானப் போராட்டம் நடைபெற்றது. அந்நாட்டு ஜனாதிபதி டிகாலேயின் ஜனவிரோதக்கொள்கையை எதிர்த்துத்தான் அப்போராட்டம் நடைபெற்றது. அப் போராட்டத்தில் பிரான்ஸ் மாணவர் சமுதாயமே பங்கு கொண்டது. பள்ளிகளும், கல்லூரிகளும் மூடப்பட்டன. இது அரசியல் பிரச்னையல்லவா? அந்தப் போராட்டத்தில் மாணவர்கள் குதிக்கவில்லையெனில் அது "டிகாலேயின் ஜனவிரோதக் கொள்கைக்கு" பல்லக்கு தூக்குவதாகாதா?

எஸ். பி. அய்யாதுரை,
செயலாளர்,
தமிழ் பாநிலக் குழு,
இந்திய மாணவர் சங்கம்.

### பங்களாதேஷ் மாணவர்கள்!

நமது அண்டை நாடான கிழக்கு பாகிஸ்தானில் நடக்கும் "பங்களா தேஷ்" விடுதலைப் போராட்டத்தின் முன்னணியில் நிற்பவர்கள் மாணவர்களே. யாகியாகானின் ரத்தவெறி பிடித்த ராணுவ அடக்குமுறைறையை எதிர்த்து தன்னலமற்றமுறையில் போராடி வருகிறார்கள்.

மாணவர்கள் மட்டுமல்ல. மாணவிகளும் தங்களது உயிரையும் துச்சமென மதித்து, தன்னலமற்ற முறையில் போராடி வருகிறார்கள். யாஹ்யாகானின் டாங்கி ஒன்றை ஒரு பெண் தனியாக பாம்வைத்து தகர்த்து, தன்னையும் அழித்துக்கொண்ட செய்தியை நாம் பத்திரிக்கைகளில் காணுகின்றோம். பங்களாதேச போராட்டம் அந்த நாட்டின் அரசியல் பிரச்னை அல்லாமல் வேறு என்ன? இந்த அரசியல் போராட்டத்தில் மாணவர்கள் தங்களை அர்ப்பணித்துக் கொள்ளவில்லையெனில், அது பங்களா தேஷ் மக்களின் உரிமைப் போராட்டத்தைக் காட்டிக் கொடுத்ததாகாதா?

இதே போன்று துருக்கியிலும், நைஜீரியாவிலும் இதர நாடுகளிலும் நடைபெறும் மாணவர்கள் போராட்டங்கள் அந்தந்த நாட்டின் அரசியலிலிருந்து பிரிக்க முடியாத ஒரு அரசியல் போராட்டமேயாகும்.

### இந்திய மாணவர்கள்!

இந்திய நாட்டின் சுதந்திரப் போராட்டத்தில் மாணவர்களுக்கு உரித்தான இடமுண்டு. அந்த தேசிய விடுதலை இயக்கத்தின் முன்னணித் தலைவர்கள் பெரும்பாலோர் மாணவர்களாய் இருந்தவர்களே!

சுபாஸ்சந்திரபோஸ் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டதற்காக கல்லூரியை விட்டு வெளியேற்றப்பட்டார். இது போன்று பல தலைவர்கள். இந்திய தேச விடுதலைப் போராட்டம் அரசியல் பிரச்னை அல்லவா? அன்னிய பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகளிடமிருந்து அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கான போராட்டம்தானே அது?

இந்த அரசியல் போராட்டத்தில் மாணவர்கள் தங்கள் பங்கைச் செலுத்தவில்லை என்றால் அது தேசத் துரோகக் குற்றமல்லவா?

1965-ல் நடைபெற்ற கட்டாய இந்தித் திணிப்பை எதிர்த்து நடைபெற்ற போராட்டம், இந்திய அரசாங்கத்தின் மொழிக் கொள்கை சம்பந்தப்பட்டதுதானே! அப்படியென்றால் அரசியலில் சம்பந்தப்படுவது என்றுதானே பொருள்?

எனவே, எந்த நாட்டில் நடைபெறும்படியான மாணவர்கள் போராட்டமானாலும், அது அரசியல் பிரச்னையிலிருந்து பிரிக்க முடியாததாகத்தான் இருக்க முடியும்.

அப்படியென்றால், இன்று இந்திரா காந்தியும், கருணாநிதியும், பிற முதலாளித்துவ தத்துவாசிரியர்களும் "மாணவர்கள் அரசியலில் பங்கெடுக்கக் கூடாது" என்று ஏன் உபதேசம் செய்கிறார்கள் என்று பார்ப்போம்.

### மாணவர்கள் அவல நிலை!

வெள்ளையன் ஆட்சியில் ஏழை வீட்டுப் பிள்ளைகள், பள்ளிகளுக்கோ, கல்லூரிகளுக்கோ செல்லமுடியாத நிலை. இன்றும் அந்த நிலைமாறி விட்டதா? இல்லை. கிராமப்புறங்களில் சென்று பார்த்தால் இந்த உண்மையைப் பார்க்கலாம். ஏராளமான சிறுவர்கள், படிக்கவேண்டிய வயதில் ஆடுமாடுகளை மேய்த்துக் கொண்டிருப்பதையும் விறகு சுமந்து விற்பதையும், காணலாம்.

25 வருட சுதந்திரத்திற்குப் பின் நமது நாட்டில் படிப்பவர்கள் எண்ணிக்கை 100க்கு 29 பேர்தான் இது அரசாங்கப் புள்ளிவிபரக் கணக்குப்படியாகும்.

1971- மே மாதத்தில் கோவையில் கல்வி சம்பந்தமானக் கருத்தரங்கு ஒன்று நடந்தது. அதில மதுரைப் பல்கலைக் கழகத்துணை வேந்தர் திரு. மு. வரதராசனார் கூறிய உண்மை:-

"முதல் வகுப்பில் சேரும் 100 பேர்களில் 15 பேர்தான் எஸ். எஸ். எல். சி. வரையில் தொடர்ந்து படிக்கிறார்கள். 6-வது வகுப்புக்கு வரும் 700 மாணவர்களில் 30 பேர்தான் செக்கண்டரிக் கல்வியைப் பூர்த்தி செய்கிறார்கள்," என்ற உண்மையைக் கூறினார்.

### காரணமென்ன?

மேலேகூறிய நிலைக்குக்காரணமென்ன? ஏன் அத்தனை மாணவர்களும் தங்கள் கல்வியை இடையில் நிறுத்தவேண்டியுள்ளது? படிக்கும் திறமை இல்லை என்றோ அல்லது படிக்க விருப்பமின்மை என்றோ யாரும் காரணம் கற்பிக்க முடியாது.

அப்படித் தங்கள் கல்வியை இடையில் நிறுத்துபவர்கள் மிகப் பெரும் பகுதி ஏழை வீட்டுப்பிள்ளைகள், விவசாயத் தொழிலாளிகள் வீட்டுப் பிள்ளைகள, மற்ற தொழிலாளிகள் வீட்டுப் பிள்ளைகள் என்பது மறைக்க முடியாத உண்மை.

### பாட்டாளிகள் வாழ்வில் மாறுதல் வேண்டும்!

இந்த உழைப்பாளி மக்கள் தங்களுக்கு இன்றைய தினம் கிடைக்கும் மிகக் குறைந்த கூலியைக் கொண்டுத் தங்கள் வாழ்க்கையை நடத்த வேண்டும். இதைக் கொண்டுதான் தங்கள் மருத்துவம், உடை போன்ற தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும். மனிதன் உயிர் வாழ்வதற்கு வேண்டிய இந்த அத்தியாவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கே இவர்களுக்குத் திண்டாட்டம். இந்த நிலையில் கல்விக்கு செலவு செய்ய முடியாத நிலை ஒரு புறம், மறுபுறம் தங்களுடைய பிள்ளைகள் ஆடு மாடு மேய்க்கச் சென்றால், அல்லது விறகு சுமக்கச் சென்றால், அல்லது வேறு வேலைகளுக்குச் செல்வதினால் கிடைக்கும் சிறிய தொகை தங்களுடைய குடும்பத்திற்கு உதவிகரமாக இருக்கும் என்று எண்ணுவதும் இன்றைய நிலையில் நியாயமே.

எனவே இவர்களுடைய வாழ்க்கையில் அடிப்படையான மாறுதல் ஏற்படாமல், அவதியுறும் மாணவர்கள் நிலைமாற வழியில்லை.

சுதந்திரமடைந்த 23ஆண்டுகள் சென்ற பின்னும் இவர்களுடைய வாழ்க்கையில் மாறுதல் இல்லை. மேலும் மேலும் அவர்களுடைய வாழ்நிலை க்ஷீணித்துக் கொண்டேதான் போகிறது. ஏன் இந்த நிலை?

### சுதந்திரத்தை அனுபவிப்பது யார்?

நாடு சுதந்திரமடைந்தால் தங்கள் வாழ்க்கையில் மாறுதல் ஏற்படும் என்று ஏங்கிக் கொண்டிருந்த இந்தப் பாட்டாளிகள், மாணவர்கள் இன்று ஏமாந்து நிற்கிறார்கள். நாட்டின் விடுதலைப்

(4-ஆம் பக்கம் பார்க்க)

## திரைப்பட திறனாய்வு

# புதிய வாழ்க்கை

புதிய வாழ்க்கை! யாருக்குப் புதிய வாழ்க்கை? அடிப்படைத் தேவைகளுக்காக அல்லற்படுகிறார்களே, அந்த மக்களுக்கா? இலலை இல்லை! வாழ்விற்குப் பயன்படாத-வாழ்வோடு ஒட்டாத- வாழ்க்கையின் நெறி முறைகளுக்கு முரண்பட்ட ஒன்றிரண்டு ஆண்களுக்கும் பெண்களுக்கும் 'புதிய வாழ்க்கை' கிட்டுகிறது. இதைத்தான் பாபு மூவீசாரின் 'புதிய வாழ்க்கை' திரைப்படத்தில் தெரிந்துகொள்ள முடிகிறது.

மனநோய் மருத்துவ மனையிலிருந்து தொடங்குகின்றகதை மூன்றுஜோடிகளின் திருமணத்தில் முடிகிறது. மனநோய், ஆள் மாறாட்டக் குழப்பம், அபலைப் பெண்களின் கண்ணீர் இவைதான் கதைக்கு அடிப்படை.

பாத்திரங்கள் சமுதாயவாழ்விலிருந்து விலகி நிற்பதால் கதையில் உயிரோட்டம்இல்லை. விறுவிறுப்பு அல்லது பரபரப்பு ஏற்பட வேண்டும் என்பதற்காக வேண்டாத குழப்பங்களெல்லாம் பின்னப்பட்டுள்ள நகைச்சுவைக் காட்சிகள் கதையை ஓரளவு நடத்திச் செல்கின்றன.

படத்தின் தலைப்பு புதுமை விரும்பிகளுக்கு புதுமையாகத் தோன்றலாம் ஆனால் படத்தில் எந்தப் புதுமையும் மருந்துக்குக்கூட இல்லை. புதுமையின் இடத்தையும் அதன் தடத்தையும் பூதக்கண்ணாடி வைத்துத்தான் தேடவேண்டும்.

ஒரு குழந்தை யாருக்கு— எந்தப் பெண்ணுக்குப் பிறந்தது என்பது புதிராக்கப்பட்டு பல அபத்தங்களுக்குப் பின் புதிர் விளக்கப்படுகிறது.

மன நோயால் பாதிக்கப்பட்ட விஜயா என்னும் மல்லிகா, சங்கர் என்னும் இளைஞனால் நோய் தெளியப்பெற்று அவனோடு ஆடியும் பாடியும் இணைந்தும் பிணைந்தும்வாழ்ந்துவிட்டு இறுதியில் என்றோ ஒரு நாள் எப்படியோ இராஜு என்பவனின் முரட்டுத்தனத்தால் தனக்குக் குழந்தை பிறந்தது என்று கேள்விப்பட்டு சங்கரை விட்டுவிட்டு இராஜுவோடு வாழப்போகிறேன் என்பதும், சங்கரும் அதை அனுமதித்து விஜயாவோடு வாழ்ந்ததெல்லாம் வெறும் நடிப்பு என்று சொல்வதும், பின்னர் இதுவும் புதிராகி உமா கல்பனா என்னும் மேலும் இரு பெண்களும் இழுபட்டு குழந்தைக்கு உண்மைத் தாய்—தந்தை கண்டுபிடிக்கப் படுவதும் படு அபத்தமான காட்சிகளாகும்.

புதியதோர் சமுதாய மாற்றத்தில்—புதியதோர் புரட்சிகரச் சிந்தனையில் 'புதிய வாழ்க்கை' பொருந்திபிருக்கவில்லை பழைய வாழ்க்கையின் அழுகல்களும் அபத்தங்களுமே தலைவிரித்தாடுகின்றன பழைய தலைமுறையின் எண்ணப் போக்குகளே கதையில் ஆதிக்கம் செலுத்துகின்றன.

அபலைப் பெண்களின் கண்ணீரில் ஆனந்தம் காணும் அயோக்கியன் இராஜுவாக முத்துராமனும் அவனுடைய அயோக்கியத்தனங்களை அம்பலப்படுத்தும் சங்கராக ஜெய்சங்கரும், நகைச்சுவை வெடி வெடிக்கும இரமேஷாக நாகேசும், கதைத் தலைவியாகப் ஜெய பாரதியும் மற்றும் வி. கே இராமசாமி, எஸ். வி. சகஸ்ரநாமம், பண்டரிபாய் ஆகியோரும் நடித்துள்ளனர்.

புதியது எதுவும் பதிவு செய்யப்படாத புதிய வாழ்க்கை!

—மணிவேலன்

# கண்ணோட்டம்

## மத்திய அரசின் எதேச்சாதிகாரப்பாதை

கொஞ்ச நஞ்சமிருக்கும் அதிகாரத்தையும் பறித்து மாநில அரசுகளைக் கொலுப்பொம்மைகளாக்குவதற்கு மத்திய அரசு இப்போது முற்பட்டிருக்கிறது.

மாநில அரசுகளின் நிர்வாகத்துக்கு பொறுப்பு வகிக்கும் ஐ ஏ.எஸ். அதிகாரிகள்மீது இப்போதுகூட மாநில அரசுகள் எந்தக்கட்டுப்பாட்டையும் வகிக்க முடியாது, தமிழ் மாநில அரசு கவர்னர் மாளிகையை கிண்டி எஸ்டேட்டிலிருந்து ஒரு சிறிய கட்டிடத்திற்கு மாற்றும் சிறு நடவடிக்கையைக்கூட நிறைவேற்ற முடியாது போயிற்று.

இந்த நிலைமையில் மத்திய அரசு அரசியல் சட்டத்தைத் திருத்தப் போவதாக அறிவிக்கப்படுகிறது. சட்டம் ஒழுங்குப் பொறுப்பை மாநில அரசுகளிடமிருந்து பறிப்பதற்கே இந்த நடவடிக்கை மேற்கொள்ளப்படுகிறது.

இப்போதுகூட உள்நாட்டு நாச வேலையையும் வெளிநாட்டு அபாயத்தையும் தடுக்கும் சாக்கில் மாநில அரசின் அதிகார வரம்புக்குள் மத்திய அரசு தலையிட முடியும்.

இவ்வளவு அதிகாரங்களை வைத்துக் கொண்டும் மத்திய அரசு திருப்தியடையவில்லை.

சட்டம் ஒழுங்கைப் பராமரிக்கும் பொறுப்பு மாநில அரசின் அதிகார வரம்புக்குட்பட்டதாக இருந்தும் மேற்கு வங்கத்தில் ஐ மு. அரசின் அனுமதியின்றியே அம்மாநிலத்துக்குள் வெவ்வேறு இடங்களுக்கு மத்திய ரிசர்வ் போலீஸ் படைஅனுப்பி வைக்கப்பட்டது. இதைத் தவிர தொழில் பாதுகாப்புப் படை என்று தனியான பிரிவு ஒன்றையும் எல்லைப் பாதுகாப்புப் படையையும் மத்திய அரசு அமைத்துள்ளது.

தொழிலாளர்களின் உரிமைப் போராட்டங்களை நசுக்குவதற்காக இப்படைகள் பயன்படுகின்றன. காசிப்பூரில் இவ்விதம் தொழிலாளர்கள் சுட்டு வீழ்த்தப்பட்டனர்.

போதிய அதிகாரங்களும் நிதியும் இன்றி'' நகரசபைகளின்'' நிலையிலிருக்கும் மாநில அரசுகளிடமிருந்து மீதமிருக்கும் அதிகாரங்களையும் பறிக்க இப்போது மத்திய அரசு அரசியல் சட்டத்தைத் திருத்த உத்தேசிக்கிறது.

சட்டம் ஒழுங்கைப் பராமரிக்கும் அதிகாரத்தை மாநில அரசுகளின் அதிகாரப் பட்டியலிலிருந்து மத்திய அரசுக்கும் மாநில அரசுகளுக்கும் பொதுவான அதிகாரப் பட்டியலில் சேர்க்கும் முறையில் அரசியல் சட்டத்தைத் திருத்த மத்திய அரசு உத்தேசிக்கிறது.

சென்ற நாடாளுமன்றக் கூட்டத் தொடரில் மக்களின் பேச்சுரிமையையும் எழுத்துரிமையையும் பறிப்பதற்கு அரசுக்கு அதிகாரமளிக்கும் முறையில் அரசியல் சட்டத்தை மத்திய அரசு திருத்தியது.

உடைமை வர்க்கங்களின் நலன்களைப் காதுகாப்பதற்காக அரசியல் சட்டத்தைப் பயன்படுத்தும் மத்திய அரசு, மக்களின் ஜனநாயக உரிமைகளை காலில் போட்டு மிதிக்கத் துணிந்துவிட்டதின் விளைவே இப்போது உத்தேசிக்கும் அரசியல் சட்டத்திருத்தத்தின் நோக்கமாகும்.

இதன் மூலம் பெறும் அதிகாரத்தைக் கொண்டு மாநில அரசுகளின் அன்றாட நிர்வாகத்தில் மத்திய அரசு தலையிட முடியும்.

உழைக்கும் மக்களின் போராட்டங்களை நசுக்குவதற்கு எந்த மாநில அரசாவது போலீசை அனுப்ப மறுத்தால் மத்திய அரசே நேரிடையாக நடவடிக்கை எடுப்பதற்கு இந்தத் திருத்தம் வகை செய்கிறது.

ஊதிய முடக்கம் செய்வது பற்றியும் ஊதியத்தை உற்பத்தியுடன் இணைப்பது பற்றியும் மத்திய அரசின் அமைச்சர்களே பேசுகின்றனர். தொழிற்சாலைகள் மூடப்படுவதையும் ஆட்குறைப்பு செய்யப்படுவதையும் கிராக்கிப்படி வெட்டப்படுவதையும் எதிர்த்து நாடெங்கும் தொழிலாளர்கள் போராடிக்கொண்டிருக்கின்றனர். இந்தப் போராட்டங்களை ரத்த வெள்ளத்தில் மூழ்கடிக்க அடக்குமுறை ஏவிவிடப்படுகிறது. மத்திய அரசே நேரிடையாக ''சட்டம்—ஒழுங்கை''ப் பராமரிக்கும் அதிகாரத்தை மேற்கொள்ளுவதின் மூலம், இந்த நாட்டில் ஒரு போலீஸ் அரசையே உருவாக்க முயற்சிக்கப்படுகிறது. எல்லா ஜனநாயக சக்திகளும் ஒன்றுபட்டு மத்திய அரசின் இந்த எதேச்சாதிகாரப்போக்கை எதிர்த்து முறியடிப்பது இப்பொழுது தலையாய கடமையாகியுள்ளது.

—ஆ. ச.

---

### போனஸ் ஒப்பந்தம் பற்றி

## எல்லா சி. ஐ டி. யூ. சங்கங்களுக்கும் ஆதரவாளர்களுக்கும்

**தோழர்களே !**

தமிழ்நாட்டில் பல தொழிற்சாலைகளிலும் போனஸ் பேச்சு வார்த்தைகளும், போராட்டங்களும் நடந்து கொண்டிருக்கின்றன. சென்ற வருடங்களில் போனஸ் பட்டுவாடா சட்டத்தை எதிர்த்து தொழிற்சங்க இயக்கம், குறிப்பாக நம் சி. ஐ. டி. யூ. தலைமையில் நடத்திய கிளர்ச்சி, போராட்டங்களின் விளைவாக, குறைந்த பட்ச போனஸ் 4சத விகிதம்தான் என்பது நிராகரிக்கப்பட்டு விட்டது. மத்திய தொழிலாளர் நல அமைச்சரே குறைந்த பட்ச போனஸ் 8-1/3 சதவிகிதமாகத்தானிருக்க முடியும் என்று சொல்லும்படி நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளார்.

இந்தச் சூழ்நிலையில், நஷ்டம் ஏற்பட்டுள்ளதாக முதலாளிகள்கூறும் தொழிற்சாலைகளில்கூட, 8 1/3 சதவிகிதத்துக்கும் குறைந்த போனசை வழங்கும் எந்த ஒப்பந்தத்திலும் நம் சி. ஐ. டி. யூ. சங்கங்களும், ஆதரவாளர்களும் கையெழுத்திட வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறோம்.

சமீபத்தில் நெல்லிக்குப்பத்தில் (இம்மாதம் 25, 26 தேதிகளில்) கூடவிருக்கும் சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக் குழு, போனஸ் பிரச்னையைப் பற்றி விவாதித்து முடிவெடுத்து, தன் நிலையை மேலும் தெளிவுபடுத்தும்.

ஏ. நல்லசிவன்
உதவிச் செயலாளர்
சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக்குழு

மதுரை.
18-9-71.

---

### தர்மபுரி அரசு கலைக்கல்லூரி

# மாணவர்கள் போராட்டம் வெற்றி

தர்மபுரி, செப். 18—
தர்மபுரி அரசினர் கலைக் கல்லூரி மாணவர்கள் நீண்ட போராட்டத்திற்குப் பின் வெற்றி பெற்றுள்ளார்கள். இரண்டு மாத காலம் தொடர்ந்து தங்கள் கோரிக்கைகளிலிருந்து பின் வாங்காமல் போராடி வெற்றி பெற்றுள்ளனர்.

தர்மபுரி கலைக் கல்லூரி மாணவர்கள் விடுதி வசதியில்லாமல் மிகவும் அவதியுற்று வந்தார்கள். குறிப்பாக பிற்பட்ட வகுப்பைச் சேர்ந்த மாணவர்கள் விடுதியில்லாமல் மிகவும் கஷ்டப்பட்டனர்.

எனவே மாணவர்கள், 120 பேர் கொண்ட அரிசன நல விடுதி ஒன்றைத் திறக்கக்கோரி பல முறை விண்ணப்பம் தந்தி ஆகியவைகளை சம்மந்தப்பட்ட அதிகாரிகளுக்கும், அரசுக்கும் அனுப்பியும் பயனில்லாது போயிற்று.

எனவே மாணவர்கள் 2—8—71ல் தருமபுரிமாவட்ட ஆட்சியாளர் அலுவலகம் முன் விடுதி கோரி, ஆர்ப்பாட்டம் நடத்தினர். அதிகாரிகள் 1 வார காலத்திற்குள் கோரிக்கைகளை நிறைவேற்றுவதாக உறுதி கூறினர்.

ஆனால் உறுதிமொழி நிறைவேற்றப் படாததின் காரணமாக மாணவர்கள் மீண்டும் தருமபுரி மாவட்ட ஆட்சியாளர் அலுவலகம் முன்பு உண்ணாவிரதமிருந்தனர். உண்ணாவிரதத்திற்கு ஆதரவு தெரிவித்து இந்திய மாணவர் சங்கத்தின் சார்பில் தோழர் எஸ் பழனியப்பன் பேசினார்.

விடுதி திறப்பதாக ஆணை வந்தவுடன் மாணவர்கள் போராட்டத்தை நிறுத்தினர்.

ஆனால் விடுதியில் மாணவர்கள் எம்.எல்.ஏ.க்கள் சிபாரிசு அடிப்படையில் சேர்த்துக் கொள்ளப்பட்டதால், தகுதியுள்ள மாணவர்களுக்கு இடம் கிடைக்கவில்லை.

விடுதித் திறப்பு விழா 27—8—71-ம் தேதி நடந்த போது, விடுதியில் மாணவர்கள் எண்ணிக்கையை அதிகரிக்கக் கோரிக் கொடுத்த மனுவை வாசித்துப் பெற்றுக்கொள்ள அமைச்சர் ராசாராம் மறுத்து விட்டார். மாணவர்கள் எல்லோரும் விழாவைப் பகிஸ்கரித்தனர்.

மீண்டும் மாணவர்கள் தங்கள் கோரிக்கைக்காக 3—9—71-ம் தேதி தங்கள் கல்லூரி முன் உண்ணாவிரதமிருந்தனர். உண்ணாவிரதத்தை ஆரம்பித்து வைத்து தோழர் எஸ் பழனியப்பன் பேசினார் உண்ணாவிரதத்திற்குப்பின்னால் மேலும் 60 மாணவர்களை விடுதியில் சேர்த்துக்கொள்வதாக அதிகாரிகள் எழுத்து மூலம் உறுதி கூறினார்கள்.

---

## மாணவர்கள் அரசியலில்.........

(3ம் பக்கத் தொடர்ச்சி)

போராட்டத்தின் முன்னணியில் நின்று போராடியது ஒருவர். ஆனால் அந்தச் சுதந்திரத்தைப் புசிப்பவர்கள் வேறொருவர்.

அன்றைய தினம் வெள்ளையனின் பீரங்கிகளையும், துப்பாக்கி ரவைகளையும், குண்டாந்தடிகளையும் எதிர்த்து நின்று ரத்தம் சிந்தி உயிர்த் தியாகம் புரிந்தவர்கள் யார்? அந்தப் பாட்டாளி வர்க்கம், அந்த மாணவர் சமுதாயம் இன்று சமுதாயத்தின் அதள பாதாளத்தில்.

அன்று சுதந்திரப் போராட்டத்தில் அற்பசொற்பமே பங்கெடுத்த டாட்டாக்கள், பிர்லாக்கள் சமுதாயத்தின் உச்சாணிக் கொம்பிலே கொலு வீற்றிருக்கிறார்கள். சுதந்திரத்திற்கு முன்பே தன்தொழிற்சாலைகளில் கூலிஉயர்வு கேட்ட தொழிலாளிகளைச்சுட்டுப் பொசுக்கிய அந்த டாட்டாக்களும், பிர்லாக்களும் தான் இன்று உல்லாச புரியில் துயில்கிறார்கள்.

சுதந்திரப் போராட்ட காலத்தில், பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வாதிகளுடன் சேர்ந்து நின்று விடுதலை வீரர்களை ஈவு இரக்கமின்றி சுட்டுப் பொசுக்கிய ராஜமன்னர்களின் இன்றைய நிலை என்ன? ஆண்டுதோறும் இந்த தேச துரோகிகளுக்கு, மத்திய அரசு மக்கள் பணத்திலிருந்து சுமார் 6 கோடி ரூபாய் ராஜமான்யமாகக் கொடுத்து வருகிறது. இதை நிறுத்த இன்றைய மத்திய அரசுக்கு தைரியமில்லை. நஷ்ட ஈடு சுமார் 100 கோடி ரூபாய் தர ஆலோசனை செய்து வருகிறது.

''இந்தியாவிற்குச் சுதந்திரம் வேண்டாம் இந்தியர்களுக்கு ஆளத்தெரியாது, இந்தியாவிற்கு சுதந்திரம் கொடுத்தாலும், தமிழகத்திற்கு மட்டும் சுதந்திரம் வேண்டாம்'' என்று கூறிய ராஜா சர். முத்தையா செட்டியார் கும்பலுக்கு கோடிக்கணக்கான சொத்துக்கள்.

பிரிட்டிஷாருக்கு பல வழிகளிலும் உதவியாக இருந்த நிலப்பிரபுக்கள் கையில் பல கோடிக்கணக்கான நிலங்கள்.

### முதலாளிகளின் சர்வாதிகாரமே இன்று நடப்பது!

இந்தப்பிரகஸ்பதிகள்கையில் இவ்வளவு சொத்துக்கள் எங்கிருந்து கிடைத்தது? வானத்தில் இருந்தா விழுந்து விட்டது? இல்லை. அவ்வளவும் சுரண்டல் பறிமுதல் செய்யப்பட்டவைகள்தாம். இன்னும் தொடர்ந்து சுரண்டுகிறார்கள், பறிமுதல் செய்கிறார்கள். இவர்களுக்கு இதற்கு இந்த நாட்டில் சுதந்திரம். ஏனென்றால் இன்று நடக்கும் ஆட்சி இவர்களுடையது. ஆம்! இன்று இருக்கும்படியான அரசு, ராணுவம் போலீஸ் நீதிமன்றங்கள் அத்தனையுமே இவர்களுக்காக. இவர்களுடைய சுரண்டலுக்கு ஆபத்து வராமல் பாதுகாக்க, கூலி கேட்கும் பாட்டாளிகளை அடக்க, உரிமை கேட்கும் மாணவர்களை ஒடுக்க!

''ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்'' என்பது போல் ஒரு சில உதாரணங்களைப் பார்ப்போம்.

இன்று மத்திய அரசிற்கு வருமான வரி பாக்கி கட்டப் படாமல் இருக்கும் தொகை சுமார், ரூ 750 கோடி. இதைக் கட்டாமல் இருப்பவர்கள் யார் தெரியுமா? மேலே கூறப்பட்ட டாட்டா, பிர்லா போன்ற பிரகஸ்பதிகளே. இதைப்பற்றி மத்திய அரசு மூச்சு விடுவதில்லை. ஆனால் சாதாரண ஏழை ஜனங்கள் 2 ரூபாய் வீட்டு வரி கட்டா விட்டால், அவர்கள் வீட்டின் கதவு அமீனா கையில். பண்ட பாத்திரங்கள் அமீனா கையில் இதை நாம் கண்கூடாகக் காண்கிறோம்.

தமிழகத்தில் கூட மில் முதலாளிகள் சுமார் 2 கோடி மின்சாரக் கட்டண பாக்கி வைத்துள்ளார்கள். அவர்களை தமிழக அரசு தொடுமா? ஆனால் சாதாரண ஏழைகள் குறைந்த பட்ச மின் கட்டணத்தைக் கட்டா விட்டால் வீட்டு விளக்குகள் எரியாது.

இதுதான் இன்றைய இந்தியாவின் ஒட்டு மொத்தமான நிலை. பார்லிமெண்டரி ஜனநாயகம் என்ற போர்வையில் முதலாளிகள் ஏழைகள்மீது செய்யும் சர்வாதிகாரம். எனவே இன்றைய அரசு அமைப்பு முதலாளித்துவ சர்வாதிகாரமே.

இந்த அமைப்பில் ஏழைகளுக்கு வாழ்வில்லை. மாணவர்களுக்கும் வாழ்வில்லை.

### சோசலிஸமே தீர்வுக்கு வழி!

எனவே இந்திய மாணவர் சமுதாயத்தின் முன் ஒரு வினா? இந்த அமைப்புத் தேவை தானா? தேவைதான் என்றால், மாணவர்கள் பிரச்னையும் தீர்க்க முடியாது. எதிர்காலம் இருண்டே தான் இருக்கும்.

தேவையில்லை என்றால் வேறு வழி? உண்டு. அதுதான் ரஷ்ய மக்கள் காட்டிய வழி.

சீன மக்கள் காட்டிய வழி வடவியட்நாம் மக்கள் காட்டிய வழி.

கியூபா, வடகொரியா, கிழக்கு ஜெர்மனி போன்ற நாட்டு மக்கள் காட்டிய வழி.

இந்த நாடுகளிலெல்லாம் பழைய முதலாளித்துவ சுரண்டல் அமைப்பை உடைத்தெறிந்துவிட்டுப் புது உலகு அமைத்திருக்கிறார்கள் பிரச்சினைகள் அற்ற உலகை அமைத்திருக்கிறார்கள். சுரண்டலற்ற உலகை அமைத்திருக்கிறார்கள், முதலாளித்துவ அரசு அமைப்பை அடியோடு எரித்துவிட்டு, சோசலிஸ அரசு அமைப்பை உருவாக்கியிருக்கிறார்கள். ஆகையினால்தான் மாணவர்கள் பிரச்சனையில்லை. போராட்டமில்லை. போலீஸ் தடியடி இல்லை. கல்லூரிகள், பல்கலைக் கழகங்கள் மூடப்படுவது கிடையது.

### மாணவர்கள் எந்த அரசியலில்?

ஆகையினால்தான் எங்களுடைய மாணவர் சங்கம் (இந்திய மாணவர் சங்கம்) மாணவர்களுக்கு அரசியல் வேண்டும் என்று கூறுகிறது.

மாணவர்கள் அரசியலில் ஈடுபடவேண்டும் என்று கூறினால், ஏதாவது ஒரு அரசியல் கட்சியின் பின்னால் சென்று அணிவகுத்து நிற்பது என்பதல்ல. இந்தியாவில் எத்தனை விதமான கொடிகளைக் கொண்ட, பெயர்களைத் தாங்கிய கட்சிகள் இருந்தாலும், சாராம்சத்தில் இரண்டு தன்மைகள் கொண்டவையே!

ஒன்று இன்றைய சுரண்டல் அமைப்பைக் காப்பது. மற்றொன்று இந்த அமைப்பை உடைத்தெறிந்துவிட்டு புதிய சோசலிஸ அமைப்பை உருவாக்குவது. மாணவர்களுக்கு வேண்டியது இரண்டாவது அரசியலே.

இப்பொழுது புரிந்துகொள்ளலாம் இந்திராகாந்தி, கருணாநிதி போன்றோர்களது உபதேசத்தை. இவர்கள் இன்றைய சுரண்டல் அமைப்பைப் பாதுகாத்து வருபவர்கள்.

மாணவர்கள் அரசியலில் ஈடுபடுவது என்றால், இவர்களையும் எதிர்த்துப் போராடுவது என்றுதானே பொருள். ஆகையினால்தான் இந்திரா காந்தியும், கருணாநிதியும் இன்று இப்படித் தலைகீழாக உபதேசம் செய்கிறார்கள்.

---

### கரூர் தாலுகா மார்க்சிஸ்ட்கட்சி

## மாநாடு

கரூர், செப். 18—
மார்க்சிஸ்ட்கம்யூனிஸ்ட்கட்சியின் கரூர் தாலுகா மாநாடு செப்டம்பர் மாதம் 12ந் தேதி காலை கரூர் அய்யாசாமி நாடார் சத்திரத்தில் ஆரம்பமாயிற்று. தோழர் சி. சோளியப்பன் தலைமை வகித்தார். மாநாட்டில் 76 பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள். தலைமைஉரைக்குபின், செயலாளர் அறிக்கை வாசித்தார். அதன் மேல் 20-க்கு மேற்பட்ட பிரதிநிதிகள் விவாதத்தில் கலந்து கொண்டார்கள். விவாதத்திற்குப் பிறகு அறிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது

அதன் பிறகு தாலுக்கா செயலாளராக சி. ரத்தின வேலு தேர்ந்தெடுக்கப் பட்டார். புதிய நிர்வாகிகளாக சி. சோளியப்பன் எம். ஆறுமுகம், கே. பி. ராமசாமி பி எல் மருதமுத்து எஸ். நடராஜன், பி. நாராயணன், என். சங்கரநாராயணன், எம். ரத்தினவேலு எம். அம்மையப்பன் ஆகிய தோழர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

### தீர்மானங்கள்

வங்க தேசத்தை இந்திய அரசாங்கம் அங்கீகரிக்க கோரியும், வியட்னாமை விட்டு அமெரிக்க படை வெளியேற இந்திய அரசாங்கம் வற்புறுத்த வேண்டுமாய் கோரியும். மேற்கு வங்கத்தில் நடைபெறும் அரசியல் படுகொலையை நிறுத்தவேண்டுமாய் இந்திய அரசாங்கத்தைக் கோரியும், உள்நாட்டுப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் தொழிற் சங்கத் தலைவர்களை தி. மு. க. அரசு கைது செய்ததையும் கண்டித்தது, விலைவாசி உயர்வை கண்டித்தும், உடனடி நடவடிக்கை எடுத்து தடுத்து நிறுத்த கோரியும் நியாயவிலைக் கடை திறக்க கோரியும் கைத்தறிக்கு சட்டப் பாதுகாப்பு கொடுக்காததையும் விசைத் தறியை புகுத்துவதையும் கண்டித்து தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டது.

---

### "லூனா 18" பயணம் பூர்த்தி!

மாஸ்கோ, செப். 13—
''லூனா—18'' என்ற தானியங்கு நிலையத்தின் உதவியுடன் நடைபெற்றவிண்வெளி ஆராய்ச்சித் திட்டம் பூர்த்தியாகி விட்டது.

இந்த நிலையம் செப். 2-ல் சந்திரனை நோக்கிச் செலுத்தப்பட்டது. அதன் பயணத்தின்போது 85 ரேடியோ தகவல் தொடர்புகள் நடைபெற்றன

'லூனா—18'' தானியங்கு நிலையம் 54 தடவை சந்திரனை சுற்றியது.

செப். 11ல், 'பிரேக்கிங் எஞ்சின்' இயக்கப்பட்டது. தானியங்கு நிலையம் சந்திரனின் மேற்பரப்பில் 'செழுமைக் கடல்' என்ற பகுதியைச் சூழ்ந்துள்ள பிரதேசத்தை அடைந்தது.

தானியங்கு நிலையம் இறங்குவதற்காக, மிகுந்த விஞ்ஞான முக்கியத்துவமுள்ள மலைப்பாங்கான நிலம் தேர்ந்தெடுக்கப்பட்டது. இந்தக் கடினமான நில அமைப்புச் சூழ்நிலையில், நிலையம் சந்திரனில் தரையிறங்கியது துரதிருஷ்ட வசமானது என்பதை அளவீடுகள் காட்டுகின்றன.

மாஸ்கோ நேரம் 10 மணி 43 நிமிடங்களுக்கு நிலையத்துடனான தகவல் தொடர்புகள் நின்றுவிட்டன.

நிலையத்தில் வைக்கப்பட்டிருந்த அமைப்புக்களின் இயக்கம் பற்றிய புதிய பரிசோதனை தகவல்கள் கிடைத்துள்ளன. அளவீடுகளின் விளைவுகள் ஆராயப்படுகின்றன.

---

### வைரஸ்களும் பாரம்பரியமும்!

மாஸ்கோ செப். 16—
பிராணிகளுக்கும் மனிதர்களுக்கும் நோயை உண்டாக்கும் வைரஸ்கள், தாம் வாழும் செல்களிலேயே தம்மைப் புதுப் பித்துக்கொள்கின்றன. சோவியத் மருத்துவ விஞ்ஞானிகள் குழு ஒன்று, டிக் என்செபாலிடிஸ் வைரஸ்களை ஒரு பொருளில் சோதித்தபொழுது அவற்றின் பாரம்பரிய அமைப்புக்கள் ஊனமடைந்தன. சில நாட்கள் கழித்து அந்த வைரஸ்கள் ஒரு பன்றியின் சிறு நீரகங்களுக்கு மாற்றப் பட்டபோது, அவை மீண்டும் முழுமையாகச் செயல் படத் தொடங்கின; ஆரோக்கியமுள்ள சந்ததிகளை உற்பத்தி செய்தன.

பிராணிகளையும் மனிதர்களையும் போலவே, வைரஸ்களும் செல்களிலுள்ள காடிப் பொருள் அமைப்பு ஒன்றைப் பயன்படுத்துகின்றன என்றும், இந்த அமைப்பானது அவற்றின் பாரம்பரியக் கட்டுக்கோப்பை எதிர்மறைச் சூழ்நிலைகளிலிருந்து பாதுகாக்கிறது என்றும் விஞ்ஞானிகள் கருதுகிறார்கள். இந்தப் பிரச்சினைக்கு அவர்கள் விடை கண்டால், எல்லாவிதமான வைரஸ்களுக்கும் எதிராக மிகப்பயனுள்ள வாக்சீன்களை அவர்களால் தயாரிக்க முடியும் என்று கருதப்படுகிறது.

---

### பாரிசில் நாள் ஒன்றுக்கு 50 திருட்டுகள்!

பாரிஸ் நகரில் வீடு புகுந்து திருடும் திருடர்களுக்கு ஆகஸ்டு மாதம் நல்ல வேட்டைக் காலமாகும். அந்த மாதத்தில் போலீஸாரில் மூன்றில் ஒரு பகுதியினர் லீவில் போய் விடுவர். மேலும் பாரிஸ் நகரவாசிகளில் பலரும் அதே மாதத்தில் நகரை விடுத்து வேறு இடங்களுக்குச் சென்றுவிடுவதுண்டு. இதனால் ஆளில்லாத வீட்டுக்குள் புகுந்து அகப்பட்டதைச் சுருட்டிக்கொள்வதற்கு, ஆகஸ்டு மாதம் திருடர்களுக்கு மிகவும் வசதியான மாதமாக இருந்து வருகிறது. எனவே அங்கு ஆகஸ்டு மாதம் திருட்டுகளும் அதிகரிக்கின்றன. 1969 ஆகஸ்டில் பாரிஸ் நகரில் 1,800 வீட்டில் திருட்டு நடந்ததாகவும் 1970-ல் 2,300 வீடுகளில் திருட்டு நடந்ததாகவும் பாரிஸ்போலீஸின் பதிவேடுகள் கூறுகின்றன. இந்த ஆண்டில் எத்தனை வீடுகளில் திருட்டு நடந்தது என்று தெரியவில்லை. ஆயினும் சென்ற ஆகஸ்டு மாதத்தில் ஒரு வீட்டிம் திருட்டு நடந்தது பற்றி வீட்டுல்காரர் போலீசுக்குப் புகார்செய்த போது, ''ஒருநாளைக்கு இத்தகைய புகார்கள் 50 வருகின்றன. நாங்கள் எதைத்தான் கவனிப்பது?'' என்று போலீசார் அலுத்துக் கொண்டார்களாம்.

---

### அரிஜன சேரிக்குத் தீ!

### ஒருவர் மரணம்!

வாரணசி செப் 16.
பனகதா கிராமத்திலுள்ள அரிஜனச் சேரிக்கு நெருப்பு வைக்கப்பட்டது. அதில் சிக்கி ஒருவர் மரணம் அடைந்தார். மற்றும் கடுமையான தீக் காயங்களுடன் 18 பேர் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

இந்தக்கிராமத்தில் தொடர்ந்து அரிஜனங்களுக்கு எதிராக அக்கிரமங்கள் தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இதைத்தொடர்ந்து 100 அரிஜனங் குடும்பங்கள் வாழும் சேரிக்கு நெருப்பு வைக்கப்பட்டது.

---

### ஆளும் கட்சிக் கூட்டத்துக்கு விடுமுறை!

ஆகஸ்ட் ஒன்பதாம் தேதி புதுக்காங்கிரஸ், பங்களா தேஷுக்கு ஆதரவாக பொதுக் கூட்டம் நடத்திபதல்லவா? அந்தக்கூட்டத்தில் இந்திரா காந்தி பேசுவதைக் கேட்பதற்காக புதுடில்லியில் அரசு ஊழியர்களுக்கு அரை நாள் விடுமுறை விடப்பட்டதாம்.

—ஸ்டேட்ஸ்மெண்ட்

---

### தென்பிராந்திய ரெயில்வே தொழிலாளர் சங்க பொதுக் கூட்டம்!

சேலம், செப். 16—
சூரமங்கலத்தில் இன்று ரெயில்வே தொழிலாளர் ஏற்பாடு செய்திருந்த பொதுக் கூட்டத்தில் ரெயில்வே நிர்வாகத்தின் மோசடியையும் மத்திய மாநில தொழிலாளர் விரோதக் கொள்கைகளைக் கண்டித்தும்தோழர்கள்அனந்த நம்பியார், வி. ராமசாமி, பால கிருஷ்ணநாயர் ஆகியோர் பேசினர்.

---

### நடக்க இருப்பவை

19—9—71

சி. ஐ. டி. யூ. வாரம்
அமெரிக்க ஏகாதிபத்தியத்திற்கு எதிரான வியட்நாம் ஆதரவு தினம்.

மதுரையில் மாலை 5 மணிக்கு பூந்தோட்டம் ஆறு முச்சந்தியிலிருந்து ஊர்வலம் புறப்படும். மாகாளிபட்டி இ எம்.எஸ். படிப்பகத்தில் பொதுக்கூட்டம். தோழர் ஏ. பாலசுப்பிரமணியம்பேசுவார். பாவலர் வரதராசன் குழுவின் இன்னிசை நிகழ்ச்சியும் நடைபெறும்.

---

### திண்டுக்கல்லில் பிரச்சாரப் பாத யாத்திரை

திண்டுக்கல். செப். 18—
மத்திய-மாநில அரசுகள், மக்கள் மீது விதித்துள்ள வரிச் சுமை, அன்றாட உணவுபண்டங்களின் விலை உயர்வு வேலையில்லாத் திண்டாட்டம் - ஆகிய கொடுமைகளைக் கண்டித்து திண்டுக்கல் நகரில் பாத யாத்திரைப் பிரச்சாரம் நடைபெற்றது.

இந்த இயக்கம், சி.ஐ.டி யூ. தொழிற்சங்கங்களின் சார்பாகவும், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பாகவும் நடத்தப்பட்டது.

தோழர் எஸ் ஏ. தங்கராசன் தலைமையில் பெருந்திரளான கட்சி தோழர்களும் அனுதாபிகளும் இதில் கலந்து கொண்டனர். இந்த இயக்கம் சம்பந்தமாக பல்லாயிரக் கணக்கான நோட்டீஸ்கள் நகரெங்கும் விநியோகிக்கப்பட்டன. ஏராளமான பிரசுரங்களும் விநியோகிக்கப்பட்டன. உண்டியல் வசூலில் ரூ. 25—53 வரை பொது மக்கள் நிதியளித்தனர்.

மேட்டுராஜபட்டி, வடுக மேட்டுராஜபட்டி, ஆரோக்கியமாதா தெரு, மெஸ்கில்ஸ் ரோடு போன்ற உழைப்பாளர்கள் மிகுந்த பகுதிகளில் பிரச்சாரம் செய்யப்பட்டது.

திண்டுக்கல் நகர் முழுவதும் பல்லாயிரக் கணக்கான மக்கள் இப்பாதயாத்திரைப் பிரச்சாரத்தைக் கேட்டனர்.

---



இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக் குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (13, முதல் சந்து வடக்குச் சித்திரை வீதி மதுரை—1.) அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் : கே. முத்தையா.